# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



நோ ஃபுல் ஸ்டாப்!

KALKI • 08.02.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



"எங்களுக்கும் கொடுங்க 'கோட்டா'!"



கல்பாக்கம்:

அணு உலையா? அனைவருக்கும் உலையா?

# DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL



Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

தமிழகத்தில் இதுவே முதல் முறை

## டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

## கேன்சர் இன்ஸ்டிடியூட் (WIA) – உடன்

இணைந்து பெருமையுடன் அறிமுகம் செய்துள்ளது

## தமிழ்நாட்டின் முதல் PET-CT




**Discovery VCT64 SLICE PET-CT SCAN**
**Installed at CANCER INSTITUTE (WIA)**
Canal Bank Road Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : **93814 36899**
**93814 36896**

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* கேன்சரை அறிகிறது. * கேன்சர் பரவியுள்ள மற்றும் முற்றியுள்ள நிலவரத்தை அறிகிறது. * கேன்சர் சிகிச்சைகான மருத்துவ திட்டமிடலுக்கு உதவுகிறது. * சிகிச்சைக்குபின் கேன்சர் மீண்டும் தோன்றுவதை அறிகிறது. * இதய தசைகளுக்கான இரத்த ஓட்டத்தை அறிகிறது. * மாரடைப்பு இதயத் தசைகளின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுகளை அறிகிறது. * ஆஞ்சியோபிளாஸ்டி மற்றும் கரோனரி ஆர்டெரி பைபாஸ் சர்ஜரிகளின் மூலம் குணப்படுத்த இயலும் இதயத்தின் தசைப்பகுதிகளை அறிகிறது. (மையோ கார்டியல் பெரிஃபியூசன் ஸ்கேன் உதவியுடன்). * மனக்குழப்பம், நினைவிழத்தல், டியூமர் முதலான மூளையின் சீரற்ற தன்மையைக் கணிப்பதுடன் மத்திய நரம்புத் தொகுப்பில் உள்ள பாதிப்புகளையும் அறிகிறது. * நோயாளியின் மூளை மற்றும் இதயத்தின் செயல்பாடுகளை இயல்பான மனிதனோடு ஒப்பிட்டு பார்க்க உதவுகிறது.

## DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL - SPECIALITIES AT A GLANCE

• Intensive Care Unit Cardiology & Cardio Thoracic Surgery • Neurology & Neuro Surgery • Trauma Care & Orthopaedics • Obstetrics & Gynaecology • ENT Surgery • Dermato Cosmetology • Pulmonology • Dentistry and Oral & Maxillofacial Surgery • Paediatrics • Gastroenterology • Transplant Surgery • Oncology • Transfusion Medicine • Nephrology • Urology • Vascular Surgery

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி - 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

# கல்கி

08.02.2009

## ஞாபகமிருக்கா?

மதுரை மாவட்ட வாசகர்களே! உங்களைத் தேடி வருது கல்கி. உங்கள் மாவட்ட சிறப்புகள், பிரச்னைகள், உங்கள் படைப்புகள் அனைத்தையும் கல்கியில் வெளியிட வாய்ப்பு.

**கடைசித் தேதி : 8.2.2009**

முழு விவரங்களுக்கு 25.01.2009 கல்கியைப் பாருங்க! உடனே படைப்புகளை அனுப்புங்க!



● ஆர்.ராஜாமணி, ஆதம்பாக்கம்

கூனி , கைகேயி... இருவரில் வில்லி யார்...?

கூனி-வில்லி; கைகேயி-அம்பி...!

● சுந்தரி, பெங்களூர்

நாமா ஓடினா 'ஜாகிங்'...நாய் துரத்தி ஓடினா...?

'டாகிங்'!

● அ.ஷண்முக சுந்தரம், பெங்களூர்

மூளை மாற்று சிகிச்சை வந்தால் என்ன ஆகும்...?

கேள்வி நான் கேட்பேன். பதில் நீங்கள் சொல்வீர்கள்!

● பி. சிவா, பாளையங்கோட்டை

தெய்வம் நல்லவர்களை அதிகம் சோதிப்பது ஏன்...?

கஜானாவைத்தான் சோதிப்பார்கள்... குப்பைத் தொட்டிக்கு என்ன சோதனை வேண்டிக் கிடக்கு!

● மதுரை முருகேசன், தஞ்சாவூர்

தமிழில் உங்களுக்குப் பிடிக்காத வார்த்தை...?

'இல்லை'.

● ராகவன், சென்னை

குழந்தைகளுக்காக

# பால் - பாயின்ட் பெண்ணை நம்பலாமா?

நர்ஸரி-ரைம்ஸ் எழுதியது உண்டா....?

கேட்டதால் எழுதிப் பார்த்தேன்....

Up above the world so high

அதுக்கும் மேலே Ego-'I'

தப்பிழைக்கும் திருட்டுக் கழுதை

இப்பவே அதை எட்டி உதை.

● குலசை நஜ்முத்தீன், காயல்பட்டினம்

எந்தப் பெண்ணை நம்பக் கூடாது...?

குளிரக் குளிரப் பேசும் ஃபவுண்டன் பெண்ணை விட, குறைகளைக் குத்திக் காட்டும் பால்-பாயின்ட் பெண்ணை நம்பலாம்.

● மு.மதிவாணன், அரூர்

**உண்மையான சுதந்திரம் எது?**

சுதந்திரமாக உண்மை கூறும் சுபாவம்.

● சௌம்யா, கல்கத்தா

**குடிகாரன் பேச்சு விடிஞ்சா போச்சு...புது விளக்கம் ப்ளீஸ்?**

நல்ல காலம் விடிஞ்சா போச்சு குடிகாரன் பேச்சு.

● மஞ்சுதேவன், நவி மும்பை

**சத்தியத்தின் எதிர்காலம்?**

அச்சமாக இருக்கிறது. 'சத்யமேவ பயதே'!

● திலீப் சென்னை

**கிரேசி... காதல் என்ன கத்திரிக் காயா?**

பொருள் விளங்காய்.

● முத்துமாணிக்கம், அரக்கோணம்

**'ஹலோ நான் என்ன சொல்றேன்னா...' 'ஹலோ என்ன இப்படி ஆயிடுச்சு' என்று வார்த்தைக்கு வார்த்தை ஹலோ போட்டுப் பேசுபவர்களைக் குணப் படுத்துவது எப்படி கிரேசி....?**

ஹலோபதி வைத்தியத் தால்.

● கிருஷ்ண ராஜகோபால், விருகம்பாக்கம்

**நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வது எப்போது?**

சொப்பனத்தில்...!



# கிரேஸியைக் கேளுங்கள்

● நிர்மலா ரவிச்சந்திரன், மாயவரம்

**ஏழையின் சிரிப்பில் இறைவன்... புது விளக்கம் ப்ளீஸ்...**

புதுசாக ஒரு பழைய விளக்கம்... குசேலனின் சிரிப்பில் கண்ணன்.

● டி.முருகேசன், திருவாரூர்

**உங்களுக்குப் பிடித்த பண்டிகை?**

தீபாவளி 'Fun'டிகை.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: **லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**

உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**

வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன், பா.கோபால்

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல்: 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்:
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**அ.இ.அ.தி.மு.க.வுடன் தாமரை இலைத் தண்ணீராக இருக்கும் எஸ்.வி. சேகர், பிராமண சங்கங்களின் கூட்டமைப்பு ஒன்றைத் துவக்கி, அவர்களின் இடஒதுக்கீட்டுக்குப் போராடுவதாக அறிவித்திருக்கிறார்.**

**ஏன் வேண்டும் இடஒதுக்கீடு?**

''அரசியல் சட்டத்தில் சமூகரீதியாகவும், கல்வி ரீதியாகவும் பின்தங்கி உள்ளவர்களுக்கே இட ஒதுக்கீடு என்று சொல்லியிருக்கிறது. ஆயிரக்கணக்கான பிராமணர்கள் இன்று சமூகரீதியாக பிற்பட்ட நிலையில் இருப்பது மட்டுமல்ல, அவர்களால் இன்றுள்ள வர்த்தக கல்விச் சூழலில், தங்கள் குழந்தைகளைப் படிக்க வைக்க முடியவில்லை என்பதே நிதர்சனமான நிலை. தந்தை பெரியார் சொன்ன 'வகுப்புவாரி பிரதிநிதித்துவ, இடஒதுக்கீட்டை நாங்கள் வரவேற்கிறோம். யாருக்கும் நாங்கள் எதிரியல்ல, எல்லாப் பிரிவினருக்கும் சமூகநீதி வேண்டும். அந்த அடிப்படையில் பிராமணர்களுக்கு கல்வி, வேலை வாய்ப்பில் ஏழு சதவிகிதம் இட ஒதுக்கீடு வழங்கப்பட வேண்டும் என்பதே கோரிக்கை.''

**ஏற்கெனவே இருக்கும் சங்கங்கள் செய்வது என்ன?**

''இப்போதிருக்கும் சங்கங்களைக் குறை சொல்ல விரும்பவில்லை. விஷ்ணு சகஸ்ர நாமம் வகுப்பு, ஸ்லோகப் போட்டிகள் என்று காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கின்றனவே தவிர, பிராமணர்களின் யதார்த்த வாழ்க்கை நிலையை உணர்ந்து அதைச் சரிசெய்ய, போராட்டங்களில் இறங்குவதில்லை. தமிழ்நாட்டில் 234 தொகுதிகளிலும் வெற்றி தோல்வியை நிர்ண



யிக்கும் வகையில் பிராமணர்கள் இருக்கிறார்கள். இந்த நிலையில் முதல்வர் கருணாநிதி எங்களின் இந்த நியாயமான கோரிக்கையைப் பரிசீலித்து நல்ல முடிவை அறிவிப்பார் என்று நம்புகிறேன்.''

**இடஒதுக்கீடுகளே கூடாது என்பது தானே நியாயம்?**

''ஜாதி பேதமற்ற சமுதாயம் அமைக்கப்பட வேண்டும் என்பதுதான் என் ஆசையும். ஆனால் பள்ளிகளில் என்ன ஜாதி? என்று கேள்வி கேட்பதை முதலில் ஒழியுங்கள்.''

**பகுஜன் சமாஜ்...?**

''இப்போது ஒரு கட்சியின் சட்டமன்ற உறுப்பினராக நான் இருக்கிறேன். அதிலிருந்து விலக்கப்படவுமில்லை; நானாக விலகவும் இல்லை. இடையில் ராஜினாமா செய்வது தேர்ந்தெடுத்த மக்களுக்குத் துரோகமாகும். இந்த நிலையில் பி.எஸ்.பி.யில் இருந்து அழைப்பு வந்தது உண்மையே. முற்பட்ட வகுப்பினரில் உள்ள ஏழைக் குடும்பங்களுக்கும் இடஒதுக்கீடு என்ற அவர்கள் கொள்கை எனக்குப் பிடித்திருக்கிறது. ஆனால் 'என்னை ஏன் இணைத்துக் கொள்ள விரும்புகிறார்கள்; கட்சியில் எனது நிலைப்பாடு என்னவாக இருக்கும்?' போன்ற சந்தேகங்களுக்குப் பதில் பெறுவதற்கு, அந்தக் கட்சியின் தலைவியைச் சந்தித்தால்தானே தெரியும்?''

# "எங்களுக்கும் கொடுங்க 'கோட்டா'!"

**ஜெயலலிதாவைக் கடுப்படிப்பது ஏன்?**

''எனக்கேற்ற ஒரு கட்சி; எனக்கேற்ற தலைவி'' என்று நிறைவாக இருந்த என்னை, சங்கராச்சாரியார் கைது மூலம் அதிர்ச்சியடையச் செய்தார்கள். அப்போதே நான் கட்சியை விட்டுப் போய்விடுவேன் என்று பலர் ஆருடம் சொன்னார்கள். என் குருவை எந்தச் சூழலிலும் விட்டுக் கொடுக்க முடியாது. நாளையே அவர் நிரபராதி என்று தீர்ப்பு வந்தால், உண்டான சேதங்களுக்கு யார் பொறுப்பு? ஒரு சட்டமன்ற உறுப்பினர், மாற்றுக் கட்சியைச் சேர்ந்த முதல்வரை, மக்கள் நலனுக்காகச் சந்திப்பது தவறா? கட்சியில் நான் ஏன் புறக்கணிக்கப் படுகிறேன் என்பது தெரியாது; அதைத் தெரிந்துகொள்ள வாய்ப்பு கிடையாது. என்னை அவமானப்படுத்துவதாக நான் நினைக்கவில்லை. என்னைத் தேர்ந்தெடுத்த மைலாப்பூர் தொகுதி மக்கள் அவமதிக்கப்படுவதாகவே உணர்கிறேன்.''

**தற்போதைய பிராமணர் சங்க ஒருங்கிணைப்பு உங்கள் மேல் கவனம் கவரும் முயற்சியா?**

''இதுபோன்ற அமைப்பைத் தொடங்கித்தான் பொது வாழ்வில் நீடிக்க வேண்டும் என்கிற அவசியம் எனக்கு இல்லை. வலைத்தளத்தில் 65,000 குறிப்புகள் ஏற்கெனவே என்னைப் பற்றி இடம்பெற்றுள்ளன.''

**- ப்ரியன்**

# 'ஜீவித இலட்சியம்!'



* 'வாழ்க்கை' படத்தில் வைஜயந்தி மாலா

**உயர்தரமான படங்களைத் தூய்மையாகவும் ஜனரஞ்சமாகவும் எடுத்து வெற்றிகாண வேண்டும் என்ற இலட்சியம் நிறைவேறியிருக்கிறது.**

சென்ற வருடத்தில் வெளியான தமிழ்ப் படங்களில் 'வாழ்க்கை' என்னும் படமே தலைசிறந்தது என்று சென்னை ரஸிகர்கள் பெரும்பான்மை 'வோட்டு' மூலம் தீர்மானித்தார்கள். இதிலிருந்து சென்னை ரசிகர்களின் ரஸிகத் தன்மையில் நம்முடைய நம்பிக்கை உறுதிப்பட்டது. இது மட்டுமல்ல; தமிழ்ப் பொது மக்களின் தீர்ப்பும் ரஸிகர்களின் தீர்ப்பையே வற்புறுத்தி நின்றது. 'வாழ்க்கை' படம் தமிழ்நாட்டில் அடைந்த அமோகமான வெற்றியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஏறக்குறைய ஓராண்டு காலம் தமிழ்நாடு முழுதும் 'அடாடாடா!' என்று அதிசயித்துக் கொண்டிருந்தது. ''தமிழில் இவ்வளவு நன்றாகவும் உயர்தரமாகவும் ஜனரஞ்சகமாகவும் ஒரு படத்தைக் கொண்டு வர முடிந்ததே!'' என்று தமிழ்நாட்டு ரஸிகர்கள் வியந்து கொண்டிருந்தார்கள். அந்த அதிசயமும் வியப்பும் இன்னும் தீர்ந்தபாடில்லை. அதற்குள்ளே நமது மெய்யப்பா அவர்கள் தமிழ் 'வாழ்க்கை'யைத் தெலுங்கு 'ஜீவிதம்' ஆக்கி வெளியிட்டிருக்கிறார். 'ஜீவிதம்' ஆந்திர தேசத்தையே ஒரு ஆட்டு ஆட்டி வைத்துவிட்டுச் சென்னை நகருக்கு வந்திருக்கிறது. தீபாவளியின்போது சென்னையில் 'ஜீவிதம்' வெகு சோபிதமாக விளங்கும்.

ஸ்ரீ ஏவி. மெய்யப்பன்

**அமரர் கல்கி**

# அன்றும் இன்றும் என்றும்...

அவர்களுடைய வாழ்க்கையில் இந்த 'வாழ்க்கை' படமும் 'ஜீவித'மும் இரண்டு உயர் சிகரங்கள் ஆகும். தமிழ்நாட்டிலும் சரி, ஆந்திர தேசத்திலும் சரி, இந்தப் படங்கள் இதற்கு முன் வெளியான எந்தப் பிரமாதமான படத்தைக் காட்டிலும், இன்னும் கொஞ்சம் பிரமாதமான வெற்றியை அளித்திருப்பதாக அறிகிறோம்.

இத்தகைய அமோகமான வெற்றி ஸ்ரீ ஏவி.எம். அவர்களின் மடியில் ஏதோ அதிர்ஷ்டத்தினால் 'திடுதிப்'பென்று வந்து விழுந்து விடவில்லை. ஏறக்குறைய பதினைந்து வருஷ காலமாக இடைவிடா முயற்சியுடன் ஏகாக்கிர சித்தத்துடன் உழைத்த உழைப்பின் பலன் இதுவாகும். இந்தப் பதினைந்து வருஷ காலம் ஸ்ரீ ஏவி.எம். அவர்கள் 'பணவசூல்' மட்டும் பிரதானம் என்று கருதாமல், உயர்தரமான படங்களையே கொண்டுவர வேண்டும் என்று பாடுபட்டு வந்திருக்கிறார். அவர் எடுத்த படங்களில் விரஸமான கட்டங்களையோ ஆபாசக் காட்சிகளையோ காண முடியாது. உயர்தரமான படங்களைத் தூய்மையாகவும் ஜனரஞ்சகமாகவும் எடுத்து வெற்றிகாண வேண்டும் என்ற இலட்சியத்துடன் பதினைந்து வருஷம் பாடுபட்ட பிறகு 'வாழ்க்கை' படத்தில் அவருடைய 'ஜீவித' இலட்சியம் நிறைவேறியிருக்கிறது.

ஸ்ரீ ஏவி.எம். தமது சொந்த வாழ்க்கையில் பல அரிய குணநலன்களைப் படைத்தவர்; இனிய சுபாவம் உடையவர்; உண்மை நட்பு என்னும் பண்புக்குச் சிறந்த உதாரண புருஷர்.

பாரதியாரின் பாடல் உரிமைகளைப் பல்லாயிரம் ரூபாய் கொடுத்து ஸ்ரீ ஏவி.எம். வாங்கியபோது, பலர் அவரைப் பார்த்துப் பரிதாபப்பட்டார்கள். பிறகு அவர்களே அந்தப் பாடல்களினால் 'மேனா' பணத்தை வாரிக் கட்டிக்கொண்டு விடுகிறார் என்று புகார் செய்தார்கள்.

பெருந்தொகை கொடுத்து விலைக்கு வாங்கிய பாரதி பாடல் உரிமையை, 'மேனா' எவ்வித நிபந்தனையுமின்றிப் பொது ஜன சர்க்காருக்கு உரிமையாக்கிய போது, எதிரிகளும் அவருடைய அரிய செயலைப் பாராட்ட வேண்டியதாயிற்று.

பாரதி மண்டபக் கைங்கரியம் முதலிய பொதுக் காரியங்களுக்கு, ஸ்ரீ ஏவி.எம். அவ்வப்போது அளித்துள்ள உதவிகளைப் பற்றி 'கல்கி' நேயர்கள் அறிந்து மகிழ்ந்திருக்கிறார்கள்.

கோடம்பாக்கத்தில் தமது சொந்த நன்கொடையைக் கொண்டு பிரசவ விடுதிச் சாலை ஒன்றை ஏற்படுத்த அவர் முன்வந்திருப்பதை அறிந்து பாராட்டுவார்கள்.

ஸ்ரீ ஏவி.எம். மேலும் மேலும் படத் தொழிலில் வெற்றி அடைந்து, அகில இந்தியாவிலும் ஏவி.எம்.புகழை நிலை நாட்டுவார் என்று நம்புகிறோம். ●



● ஏவி.மெய்யப்ப செட்டியார்

"இப்ப நடக்கிற சண்டை நல்லதுக்கு இல்ல. இருக்கிற கொஞ்ச நஞ்ச தமிழர்களும் செத்துப் போயிடுவாங்களோன்னு பயமா இருக்கு."

# அங்கேயும் அடிமை... இங்கேயும் அடிமை..!

## -இலங்கைத் தமிழர்கள் கண்ணீர்

இலங்கையில் யுத்தம் உச்சக்கட்டத்தை அடைந்திருக்கும் இவ்வேளையில், இராமேஸ்வரம் - மண்டபம் அகதிகள் முகாமுக்கு வரும் தமிழர்களின் எண்ணிக்கை அதிகமாகி கொண்டிருக்கிறது. வாழ்விடங்களை விட்டு வெளியேறி வந்திருக்கும் அவர்களின் மன உணர்வுகளை அறிந்துகொள்ள, மண்டபம் அகதிகள் முகாமுக்குச் சென்றோம். கடந்த ஆறு மாதங்களாக, பத்திரிகையாளர்கள் உட்பட எந்த வெளியாட்களையும் உள்ளே அனுமதிக்காத நிலையில், முகாமைவிட்டு வெளியே வந்தவர்களிடம் பேச்சுக் கொடுத்தோம். நீண்ட நேர யோசனைக்குப் பிறகே, அவர்களில் ஒரு சிலர் பேச ஒப்புக் கொண்டனர். அவற்றில் இதோ சில...

"நாங்க பத்து பேர், கள்ளத்தோணி மூலமா தனுஷ்கோடி வந்து எறங்கின அந்த நடுச்சாமத்தை மறக்கவே முடியாது. திரிகோணமலை, பங்குளம் கிராமம் செழிப்பான பூமி. மூணு ஏக்கர் வயல்ல சொந்த உழவு. ரொம்பவும் தாக்குப் பிடிச்சு இருந்து பார்த்தோம். இடைக்கால நிவாரணத்துக்குப் பிறகு சண்டை ஆரம்பமாயிடுச்சு. குண்டுச் சத்தம் கேட்டவரைக்கும் போதும்னு, புள்ளைகுட்டிங்களக் கூட்டிகிட்டு வந்துட்டோம்!'' என்கிறார் பரமேஸ்வரி.

"சிலோன் ராணுவமும், விடுதலைப்புலிகளும் மோதல்லயே இருபத்தைஞ்சு வருஷம் ஓடிப்போச்சு. லட்சக் கணக்கான தமிழர்கள் இடம்பெயர்ந்ததும்,

பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் செத்துப் போனதும்தான் மிச்சம். இப்ப நடக்கற சண்டை நல்லதுக்கு இல்ல. இருக்கற கொஞ்ச நஞ்ச தமிழர்களும் செத்துப் போயிடுவாங்களோன்னு பயமா இருக்கு. ரெண்டு நாளைக்கி முன்னாடி முகாமுக்கு சுவாமிஜி (ரவிசங்கர்ஜி) வந்தாக. சண்டை மூலமா எந்தப் பிரச்னையும் தீராது. பேச்சு வார்த்தைதான் பெஸ்ட்னு சொன்னாங்க. சுவாமிஜி சொல்றத ரெண்டு தரப்பும் கேட்டால், ஈழத் தமிழர்களுக்கு ரொம்ப நல்லது'' என்கிறார் ஒரு முதியவர்.

**சி**றுவர்களை, புலிகள் வந்து பயிற் சிக்குப் புடிச்சிட்டுப் போறதா ஒரு பேச்சு ரொம்ப வருசமா இருக்கேன்னு கேட்டா,

"**யா**ழ்தான் எங்கள்ட பூர்வீகம். எனக்கு மில்க் போர்டுல மேனேஜர் வேலை. 1995 வரைக்கும் யாழ்லதான் வசிச்சோம். சண்டை அதிகம் ஆனதும் சரிப்பட்டு வராதுன்னு வவுனியாவுக்கு இடம்பெயர்ந்து வந்தோம். நலுக்குளம் கிராமத்துல பதினோரு வருஷம் வாழ்ந்தாலும், தினம்தினம் செத்துச் செத்துப் பிழைச்சோம்னுதான் சொல்லணும். 2006ல ஃப்ளைட் ஏறி வந்துட்டோம். இப்ப கூலி வேலை செய்யறேன். அவ் விடத்தே எங்கள் உறவுகள் என்னாச்சோ எப்பிடியிருக் கோன்னு பரிதவிப்பா இருக்கு!'' என்கிறார் முத்துக்குமார்.


* முத்துக்குமார்

''உண்மை இல்லீங்க. இலங்கை ராணுவப் பாதுகாப்புப் பகுதிகள்ல, தமிழ் இளைஞர்களைச் சந்தேகத்தின் பேரில் பல வருஷம் அடைச்சு வெச்சுச் சித்ரவதை பண்றாங்க. அதுக்குப் பயந்து ஓடி வந்தவங்கதான் நாங்க!'' என்கின்றனர் ஒரு பகுதி இளைஞர்கள்.

''நாங்க அங்கேயும் அடிமைகள் போல பயந்துபயந்துதான் வாழ்ந்தோம். இந்த முகாம்லயும் அடிமைகள் போலத்தான் இருக்கோம். முக்கிய வி.ஐ.பி. யாராச்சும் இராமேஸ்வரத்துக்கோ, மதுரைக்கோ வந்துட்டுப் போற வரைக்கும், எங்கள முகாமை விட்டு வெளியே போகக் கூடாதுன்னு மூணு நாளைக்கு அடைச்சு வெச்சுடுவாங்க!'' என்கிறார் வேறோர் இளைஞர்.

''அஞ்சு நாட்டு ராணுவ உதவி சிலோனுக்கு. அதனாலத்தான் விடுதலைப் புலிகளை இந்தளவுக்குப் பின்னுக்குத் தள்ள முடிஞ்சது. தமிழீழம் தவிடு பொடியாகுமான்னு தெரியலை. எங்களைப் போன்ற ஈழத் தமிழ் அகதிகளுக்கு இனி எதிர்காலமே கேள்விக்குறிதான்'' என்கிறார் கண்ணீருடன் ஒரு பெரியவர்.

**இலங்கையிலிருந்து தப்பிவரும் நபர்களுக்கு, இராமேஸ்வரத்தின் அரிச்சல் முனை மிக அருகாமையான இடம். பாக். நீரிணையின் கடல் பரப்பில் பதினாறு கி.மீ. தூரம். அதிகபட்சமாக இரண்டு மணி நேரத்துக்குள் இங்கு வந்து விடுகிறார்கள். அரிச்சல்முனை தவிர ஓலைக்குடா, சேரான்கோட்டை, தனுஷ்கோடி - காந்திப்பாடு, முகுந்தராயசத்திரம், ஒத்தப்பனை, நெடுந்துறை... போன்ற இடங்களிலும் படகுகள் மூலமாக வந்து இறங்குகின்றனர்.**

**''வவுனியா மாவட்டம் கூசப் பிள்ளையார் குளம்தான் எங்கள் பூர்வீகம். அங்க ஓட்டிக்கிட்டிருந்த ஆட்டோவை வித்துட்டு, இங்க வந்து ஒரு வருஷம் ஆவுது. இப்ப கணவர் பெயிண்டராகப் போய் வர்றார். எங்கள் மண்ணுல நாங்க எப்போ தடம் பதிப்பமோ தெரியல. நான் மீண்டும் கர்ப்பஸ்திரீ ஆகியிருக்கேன். என்ட மகப் பேறுக்கு அம்மா வர இயலுமா என்னன்னு தெரியலயே!'' எனக் கூறும் ராசாம்பிகையின் விழியோரங்களில் கண்ணீர்த் துளிகள்.**

✱ ராசாம்பிகை

''இலங்கை அரசு, 'எங்களின் பாதுகாப்பு வளைய பகுதிக்குள் வந்துவிடும் தமிழர்களுக்கு, உரிய பாதுகாப்பு அளித்து அவர்களின் வாழ்க்கை மேம்பாடு அடைய ஆவன செய்வோம் என்கிறதே' என்று கேட்டால், ''அவர்கள் இப்போது மட்டுமல்ல எப்போதும் அப்படித்தான் சொல்கிறார்கள். ஆனால், அவர்கள் சொல்வது வேறு; செய்வது வேறாகத்தான் இருக்கிறது. அந்த வார்த்தையை நம்பி நாங்கள் போனால் முற்றிலும் அழிந்துபோக வேண்டியதுதான்'' என்கிறார் புகைப்படத்துக்கு மறுத்து விட்ட இன்னொருவர்.

எல்லோருடைய எதிர்பார்ப்பும், இந்திய அரசு இப்பிரச்னையில் நேரடியாகத் தலையிட்டுச் சுமுகமாகத் தீர்த்து வைக்காதா என்பதாகத்தான் இருக்கிறது.

செய்திச் சித்திரம் : **ஸ்ரீரங்கம் திருநாவு**

# உங்களுடைய வகுப்பறையில் கரடி உள்ளதா?






சரளமான ஆங்கிலத்திற்கான வழியினை கண்டுபிடியுங்கள்

| எளிமை | இனிமை | திறன் நிறைந்த |
| --- | --- | --- |
| தாய்மொழி அணுகுமுறையில், ஒரு தனித்தன்மை வாய்ந்த, உள்ளுணர்வு மிக்க, ஆழ்ந்த வலுமையான தளத்தில் | செயல் பாதை - மொழியை செயல்பாடு முறையில் இசை பாதை - இசையின் துணையுடன் கதை பாதை - ஆடியோ புத்தகத்தை கேட்பதன் மூலம் கற்பித்தல் | சரளமான ஆங்கிலத்தை 72 மணி நேரத்தில், ரூ.100 - க்கும் குறைந்த செலவில் |

THE KARADI TALES COMPANY

contact@karaditales.com / +91 44 42054243
Karadi Tales Company Pvt. Ltd., Chennai 600 020, India

www.karaditales.com

# ஃபேஷன் ஜோசியம்

நம்மில் பலருக்கு லக்கி கலர்ஸ் மீது நம்பிக்கை உண்டு. "இது என் லக்கி புடைவை. இதைக் கட்டிட்டுதான் கல்யாணம் நிச்சயமாச்சு", "இது என் லக்கி ஷர்ட். இதைப் போட்டுட்டுப் போய்தான் வேலையோடு வீடு திரும்பினேன்"... இப்படிப் போகும். ஒவ்வொரு ராசிக்குமே தனிப்பட்ட டிரஸ் சென்ஸ் உண்டு. ஸ்டைல், கலர் வைத்தே இவர் இன்ன ராசி எனக் கணிக்கும் ஜோதிடர்களும் உண்டாம். இனி ஒவ்வொரு ராசிக்குமான ஃபேஷன் ஜோதிடத்தைப் பார்ப்போமோ...



**மேஷம்:** இவர்களுக்குப் பிடித்த கலர் சிவப்பு. லேட்டஸ்ட் ஃபேஷன் என்னவோ அதைதான் போடுவார்கள். கூட்டத்தில் தனித்து தெரிய வேண்டுமென்ற ஆவல். தன்னுடைய டிரஸ்ஸை எல்லோரும் பார்க்கணும், பணத்தை இப்படி வாரி இறைச்சு டிரஸ் வாங்கறானேன்னு பிறர் வயிற்றெரிச்சல் படணும் என சீக்ரெட்டாக ஆசை வைப்பார்கள். கேஷிவல் லுக்தான் பெஸ்ட் என்கிறது ஸ்டைல் பட்சி.

**ரிஷபம்:** கம்ஃபர்ட்டபிள் எனக்கு முக்கியம் என நம்புபவர்கள். ஹை குவாலிட்டிதான் பார்ப்பார்கள். ஆனால், சேல்ஸ் எங்கே? தள்ளுபடி எங்கே! என ஆராய்ந்து வாங்குவார்கள். வருடத் துவக்கத்தில் 'ரிச்' டார்க் கலர்களிலும் வருட முடிவுக்கு முன் டார்க் ப்ளூ, பெர்பல் போன்ற கலர்களிலும் டிரஸ் போட்டால் சூப்பர் ரிசல்ட் கிடைக்கும். லெமன் ரெட் மிக்ஸ், ப்ளூ, பிங்க் இது லக்கி கலர்ஸ்!

**மிதுனம்:** ஒரு யூத் லுக் இவர்களுடையது. லைட் அண்ட் பிரைட் இதுதான் இவர்களுடைய சாய்ஸ். ஃபங்கி ஸ்டைல்தான் பிடிக்கும். ப்ளூ ஜீன்ஸ் மற்றும் டாங்க் டாப் போட்டு சுதந்திரமாக திரியப் பிடிக்கும். இன்னொரு ரகசியமும் உண்டு. இந்த ராசிக்காரர்கள் பர்ஸ், ஹேண்ட் பேக் பார்த்தால் பட்டென்று வாங்கி விடுவார்கள். ராசி கலர் சிவப்பு / வெளுப்பு காம்பினேஷன். மல்டி கலர் பாட்டர்னும் போடலாம்.

**கடகம்:** சாஃப்ட், நேர்த்தி, பாரம் பர்யப் பிரியர்கள்... என இவர்களுடைய





வார்ட்ரோபைப் பார்த்துச் சொல்லி விடலாம். எளிதில் எந்த ட்ரஸ்ஸையும் தூக்கிப் போட மாட்டார்கள். சென்டிமெண்டல் அட்டாச்மென்ட் உண்டு. ப்ளூ, சில்வர், க்ரீன் மற்றும் பழுப்பு இவர்களுடைய லக்கி கலர்ஸ். வெள்ளி மற்றும் முத்து நகைகள் என்றால் தனிக் காதல்!

**சிம்மம்:** ராயல் டேஸ்ட் இவர்களுடையது! தனி ஸ்டைல், கான்ஃபிடன்ஸ் இவர்களுடைய பலம். காஸ்ட்லி ட்ரஸ்தான் போடுவார்கள். பளபள துணி, சீக்வென்ஸ் வைத்த டாப்ஸ், ஸ்கர்ட், சாட்டின், சில்க், மற்றும் போல்ட் கலர்களை போட்டு அம்சமாக நடப்பார்கள். டிஸைனர் லேபிள், பிராண்டட் வகைகளைத்தான் போடுவார்கள். தங்க நகைகள் என்றால் ஐ லவ் இட் என அட்சய திரிதியை அன்று க்யூவில் முதல் ஆளாக நிற்பார்கள்.

**கன்னி:** நீட்டான லுக் வேணும் என மெனக்கெட்டு ட்ரஸ் பண்ணுபவர்கள்! மேக்கப்புக்கு அதிக நேரம் செலவழிப்பர். நீலம் என்றால் மயங்கி, அந்த கலரையே அடிக்கடி வாங்குவார்கள். ரொம்ப ஃப்ளாஷியாக பளபளா மெட்டீரியல் போட மாட்டார்கள். எந்த கலர் போட்டாலும், தலையோடு கால் மாட்சிங் ஆக்ஸஸரீஸ் போடுவது இவர்களுடைய முத்திரை.

மற்ற ராசிக்காரர்கள் தங்களோட பலனைத் தெரிந்துக்க, ஒரு வாரம் வெயிட் பண்ணுங்க!

- லதா சேகர்



# உடையழகு... நடையழகு...




கல்கி



2009 பிப்ரவரி 8
ஸர்வதாரி தை 26
மலர் : 67
இதழ் : 28


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

# இருட்டில் இருக்கும் இலங்கைத் தமிழர்கள்!

பிரணாப் முகர்ஜி, இலங்கை சென்று திரும்பியது இந்தியப் பிரதமரே போய்வந்தது மாதிரிதான்! மன்மோகன்சிங் குணமாகி வரும் வரை நடைமுறைப் பிரதமர் பொறுப்பில் இருப்பவர் ஆயிற்றே!

ஆனால், பிரணாப் முகர்ஜியின் பயணம் என்ன சாதித்தது? என்பது தான் கேள்வி. ''விடுதலைப் புலிகளிடம் எமக்கு அனுதாபம் இல்லை'' என்று அவர் கூறுவதும், ''தமிழர்களின் உயிருக்கு அபாயம் ஏற்படாமல் யுத்தத்தை நடத்தி முடியுங்கள்'' என்று இலங்கை அரசுக்குப் பச்சைக் கொடி காட்டுவதும் அப்பாவித் தமிழர்களைக் காக்குமா? யுத்தம் முடிந்த பிறகு இலங்கைத் தமிழர்களுக்குக் குடியுரிமையும் வாக்குரிமையும் இன்ன பிற மனித உரிமைகளும் கிடைக்க உத்தரவாதம் ஆகுமா?

கைப்பற்றப்பட்ட பகுதிகளிலிருந்து இலங்கை ராணுவம் வெளியேற வேண்டும். வெளியேறாவிடில் தமிழர்கள் சொல்லொணாக் கொடுமைகள் அனுபவிக்க நேரும். அப்பகுதிகளில் ஜனநாயக முறையிலான ஆட்சி அமைக்க இலங்கை அரசு என்ன செயல்திட்டம் வைத்துள்ளது? ரணகளமாகிப்போன தமிழர் வாழ் பகுதிகளைப் புனரமைக்க என்ன செய்யப் போகிறது? 95 சதவிகிதம் யுத்தம் முடிந்துவிட்டது என இலங்கை அரசே அறிவித்துள்ள நிலையில், இக்கேள்விக்கான அவசியமும் உரிய பதில்களுக்கான அவசரமும் எழுந்துள்ளன. இதைத் தான் பிரணாப் முகர்ஜியின் இலங்கைப் பயணம் வலியுறுத்தியிருக்க வேண்டும்.




விடுதலைப் புலிகள் தமிழர்களைக் கேடயமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் வெளியேறுவதற்கான போர்த் தாக்குதல் இல்லாப் பகுதிகளை இலங்கை அரசு அறிவித்தும், அவர்களை வெளியே செல்ல புலிகள் அனுமதிக்கவில்லை; சிங்கள ராணுவத்தைத் தடுக்கும் முயற்சியில் ஏரியை உடைத்துவிட்டதன் மூலம், தமிழர்களை வெள்ளத்திலும் குடிநீர் அற்ற கொடுமையிலும் தவிக்கச் செய்திருக்கிறார்கள். இலங்கை ராணுவத்திடமும் விடுதலைப் புலிகளிடமும் இரு பக்க அடி வாங்கிய தமிழர்களுக்கு, யுத்தம் முடிந்த பிறகு அமைதியும் அர்த் தமும் உள்ள வாழ்க்கை அமைத்துத் தருவது ராஜபட்சய அரசின் கடமை.

தமிழக அரசியல் தலைவர்கள், தலைக்குத் தலை கூக்குரல் எழுப்பிக் கொண்டிராமல், ஒருங்கிணைந்து மத்திய அரசுக்கு அழுத்தம் கொடுக்க வேண்டும் - புனரமைப்பைத் தொடங்கவும் தொழில் விவசாய வளம் சேர்க்கவும் தமிழர்களுக்குப் பல்வேறு ஜனநாயக உரிமைகளை வழங்கு வதற்கும் இந்தியா தார்மிக உரிமையுடன் குரல் கொடுக்க முடியும். இந்தக் கோரிக்கைக்கு உலக நாடுகளின் ஆதரவையும் மனித உரிமை அமைப்புகளின் ஆதரவையும் திரட்டவும் முடியும். ஆனால், ராஜபட்சய கேட்டிருப்பதுபோல், கருணாநிதியோ ஜெயலலிதாவோ பிரபாகரனையும் விடுதலைப் புலிகளையும் வன்முறையைக் கைவிடும்படி ஒருபோதும் வற்புறுத்த முடியாது. ஏனெனில் பிரபாகரன் விழைவது தமிழர்கள் உரிமையைக் காட்டிலும் தனது சொந்த அதிகார மையத்தையே!

இலங்கை ஆட்சியாளர்களின் அரசியல் நிர்ப்பந்தங்கள், அங்கு நிலவும் இனவெறி போன்றவை தமிழர்களுக்கு நியாயம் கிடைக்கத் தடையாக இருந்து வருகின்றன. அத் தடைகளை நீக்க கருணாநிதியும் ஜெயலலிதாவும் சேர்ந்து குரல் கொடுக்கட்டும்; மத்திய அரசும் அவர்களோடு இணையட்டும். உலகமே அவர்களை எதிரொலிக்கும். இலங்கைத் தமிழர்களுக்கு விடிவுகாலம் பிறக்க அது ஒன்றே வழி. ●

## அஞ்சலி

அந்த அரங்கத்தில் பாதுகாப்பு அமைச்சர் ஆர்.வெங்கட்ராமன், அவரது ஆலோசகர்கள், அரசு செய லாளர்கள், முப்படைத் தலைவர்கள் குழுமியிருந்தனர். ராணுவப் பாது காப்பு ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் அப்துல்கலாம், தாங்கள் தயாரிக்கப் போகும் ஏவுகணை குறித்து விஸ்தாரமாக எடுத்துக்கூறி னார். ஏகப்பட்ட சந்தேகங்கள், கேள்விகள். எல்லாவற்றுக்கும் விளக்க மாகப் பதில் சொன்னார் கலாம். இறுதியில் எல்லோரும் அமைச்சர் ஆர்.வி.யைப் பார்த்தார்கள். ''மாலை எடுத்துக்கொண்டு, ஒருங்கிணைந்த ஒரு திட்டம் வேண்டுமே (Integrated Missile Development Project) அதுபோன்ற திட்டத்தைத் தயாரித்து நாளை காலை யில் என்னைச் சந்தியுங்கள்'' என்று கூறிவிட்டார் அமைச்சர்.

கலாமுக்கு என்ன செய்வதென்று தெரிய வில்லை. புதிய திட்டம் தயாரிக்க நேரம் பிடிக்கும். மேலும், மறுநாள் மாலை ராமேஸ்வரத்தில் நடக்க விருக்கும் சகோதரரின் மகன் திருமணத்தில் கலந்து கொள்ளவேண்டும். தன் நிலையை அருணாசலத்தி டம் பகிர்ந்துகொண்டார். இருந்தாலும், கடவுள் மீது நம்பிக்கை வைத்து வேலையில் இறங்கினார். இரவு முழுக்க கண்விழித்து, ஆர்.வி. சொன்னது போலத் திட்டம் உருவாக்கப்பட்டது. காலையில் இருவரும் சென்று அமைச்சரைச் சந்தித்தார்கள். அவர்கள் எடுத்துக்கூறிய திட்டத்தைக் கேட்ட

# 'அக்னி'க்கு அஸ்திவாரம்!

யில் என்னைச் சந்தியுங்கள்'' என்று கலாமையும் பாதுகாப்பு ஆலோசகர் அருணாசலத்தையும் பார்த்துச் சொல்லிவிட்டார் ஆர்.வி. மிகுந்த படபடப்போடு மூன்று மணி நேரம் போயிற்று.

மாலையில் இருவரும் ஆர்.வி யைச் சந்தித்தனர். ''சபாஷ்! ஆனால் எதிர்காலத் தேவையைக் கணக்கில்



ஆர்.வி., ''பிரமாதம்... உங்களை விண்வெளித் துறையிலிருந்து ராணுவப் பாதுகாப்புக்கு மாற்றிய என் நோக்கம் நிறைவேறுகிறது'' என்று கைகுலுக் கினார். அப்போதுதான் தனது பதவி மாற்றலுக்கு ஆர்.வி.தான் காரணம் என்று கலாமுக்குத் தெரிந்தது. அவர் கண்களில் கண்ணீர் கட்டியது. அது மட்டுமா? கலாம் திருமணத்தில் கலந்து கொள்ள வசதியாக, அலுவல் நிமித்தமாக போக இருந்த சென்னை - மதுரை ராணுவ ஹெலிகாப்டரில் ஏறிப்போகலாம் என்று அனுமதியும் கொடுத்து விட்டார். இந்தச் சம்பவத்தைத் தமது புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறார் கலாம்.

இன்று அக்னி, பிரிதிவி, பிரம்மோஸ் என்று இந்திய ஏவுகணைகள் அசத்துவதற்குக் காரணம், அன்று ஆர்.வி. போட்ட பிள்ளையார் சுழிதான். தமது பொது வாழ்வில் தொழிலாளர் நலன்களுக் குப் பாடுபட்டது, தொழிற்பேட்டைகள் உருவாக்கி யது என்று பெரிய சாதனைப் பட்டியல் இருந்தா லும், பாதுகாப்பு விஷயத்தில் இந்தியா வலிமை யான நாடாக உருவாக அடித்தளம் போட்ட முன் னாள் ஜனாதிபதி ஆர்.வி.யை நாடு என்றைக்கும் மறக்காது.

**- கௌசி**

ஸ்ரீ:







# 10 ஆண்டுகள்
# இடைவிடாத சேவை
# நீடித்த மகிழ்ச்சி
# நிலையான செல்வம்



எங்கள் 10வது ஆண்டில் இச்சாதனையை எட்டுவதில் உதவிக்கரம் நீட்டிய எங்கள் வாடிக்கையாளர்கள், நில உரிமையாளர்கள், சப்ளையர்கள், பைனான்சியர்ஸ் மற்றும் தொடர்புடைய அனைவருக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறோம்.

இனி வரும் ஆண்டுகளிலும் எங்கள் வாடிக்கையாளர்களுக்கு நிலையான செல்வமும் நீடித்த மகிழ்ச்சியையும் அளிக்க 10வது ஆண்டான இந்த முக்கியமான தருணத்தில் உறுதியேற்கிறோம்.



## 10வது ஆண்டு விழா
## சிறப்புச் சலுகை



**ஸ்ரீ ஹயக்ரீவா நகர்**
மஹிந்திரா வேர்ல்டு சிட்டி அருகில்
பதிவு செய்யும் ஒவ்வொரு
2400 சதுர அடி மனைக்கும்
ஸ்ரீலக்ஷ்மி ஹயக்ரீவர் உருவம் பொறித்த
24 கிராம் தங்க நாணயம்
முற்றிலும் இலவசம்

**ஸ்ரீ நரசிம்மா நகர்**
திருநின்றவூர்
பதிவு செய்யும் ஒவ்வொரு
2400 சதுர அடி மனைக்கும்
ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மர் உருவம் பொறித்த
24 கிராம் தங்க நாணயம்
முற்றிலும் இலவசம்

இச்சலுகை 15, மார்ச் 2009 வரை மட்டுமே

## BLB ESTATES PRIVATE LIMITED

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road),
T.Nagar, Chennai - 600 017. E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

இலவசமாக மனையைப் பார்வையிட அழைக்கவும் : **2834 5104/05/06**

நன்மதிப்பில் முதலீடு

# விலங்குகளுக்கு மனம் உண்டா?

''இங்கே பலரும் மனசையும் அறிவையும் வெவ்வேறாகப் பார்க்கின்றனர். ஆனால், இரண்டும் ஒன்றுக்குள் ஒன்றானவை. இத யத்தின் வேலை ரத்தம் பாய்ச்சுவது போல, சிறுநீரகத்தின் வேலை கழிவு நீக்கம் போல மூளையின் வேலைதான் மனம். மனம் செயல் படுவதற்கான இயக்கப் புள்ளிதான் அறிவு. அது தம் செயல்பாடுகளின் மூலம் மனசை முழுக்கவும் வசீகரித்து விடுகிறது'' - சற்றே சுவாரஸ்யப்படுத்துகிறார் மனநல மருத்துவர் ஆனந்தன். அவரிடம் மனம் குறித்தான சின்னச் சின்ன சந்தேகங் களை முன் வைத்தோம்...



**மூளையின் செயல் பாட்டைக் காண முடி யாதா?**

''முடியும் என்ற நம்பிக் கையில்தான், FMRI (Functional MRI)போன்ற நுண்ணிய அதிநவீன உபகர ணங்கள் உதவியுடன் ஆராய்ச்சிகள் நடை பெற்றுக் கொண்டி ருக்கின்றன. ஒருவன் கொலைவெறியுடன் இருக்கும்போது, மூளையின் நுண்ணிய வேலைப்பாடுகளில் ஏற்படும் நுட்பமான மாற்றங்கள், காதல் வயப்படும்போதும், பொய் சொல்லும் போதும், தீவிர மனப்பதற்றத்தில் இருக்கும் போதும் அது எவ்வாறு மாற்றம் பெறுகிறது என்பதைக் கணிக்கும் ஆராய்ச்சிகள் நடை பெற்றுக் கொண்டிருக்கின்றன!''

**சாதாரணமானவர்களுக்கும் மனவளர்ச்சி குன்றியவர்களுக்கும் மனத்தளவில் என்ன வேறுபாடு?**

''நுண்ணுணர்வைத் தவிர மனவளர்ச்சி குன்றியவர்களுக்கும் சாதாரணமானவர்களுக் கும் மனத்தளவில் எந்த மாறுபாடும் இருக் காது. ஏனெனில் நுண் உணர்வுதான் கவனம், அறிவு... போன்ற கூறுகளைத் தூண்டு கின்றது. மற்றபடி எண்ணங்கள் (thoughts), உணர்ச்சிகள் (emotions), புலன்களின் உணர்வு கள்... போன்றவை இருவருக்கும் சமமாகவே இருக்கும்!''

**விலங்குகளுக்கும் மனம் உண்டா?**

''பரிணாம வளர்ச்சியில் தாவர உயிர் களில் ஆரம்பித்து, பூச்சிகள், ஊர்வன, பறப் பன, பாலூட்டிகள் என அடுத்தடுத்த படி நிலைகள் வந்தபோது எதில் மூளை என்ற ஒன்று தோன்றியதோ அங்கேதான் மனமும் தோன்றியது. பறவைகள் துவங்கி விலங்கு, மனிதன் வரை மூளை இருப்பதால் மனமும் உண்டு. ஆனால், இவற்றில் மனித மனத்துக்கு மட்டும் தான் காக்னிட்டிவ் ஃபங் ஷன்ஸ் (cognitive functions) என்று சொல்லக்கூடிய நுண்ணறிவு உண்டு!''

**குதூகலமும் - உம் மணா மூஞ்சியும்... உடற் கூறா... மனத்தின் அமைப்பா?**

''உடற்கூறுக்கும் இதற் கும் சம்பந்தம் கிடை யாது. மூளை நரம்பு மண்டல வளர்ச்சி யின்போது சிலருக்கு மரபணுக்களின் ரீதியாக சில சுபா வங்கள் இயற்கை யாகவே அமைந்துவிடுவதுண்டு. மனிதனின் 16 வயதுவரை அந்த இயற்கை சுபாவத்தின் ஆதிக்கம் மட்டுப்பட்டே இருக்கும். அதற்குப் பிறகு அந்தக் குணாதிசயங்கள் அவருடைய அடையாளமாக மாறிவிடும். ஒருவருடைய சுபாவத்தை மாற்ற வேண்டுமெனில், குழந் தைப் பருவத்திலிருந்தே அறிவியல் பூர்வ மான சில பயிற்சிகளைக் கொடுக்க வேண்டும்!''

**சுயமுன்னேற்ற நூல்களைப் படிப்பதால் முன்னேறி விடலாமா?**

'' 'சுயம்', 'முன்னேற்றம்' போன்றவற்றில் குழப்பம் ஏற்படுகிறபோதுதான் ஒரு மனிதன் சுயமுன்னேற்ற நூல்களை வாங்கு

கிறான்; படிக்கிறான். முன்னேற்றம் என்பது பொருளாதாரம் சார்ந்தது மட்டுமல்ல... சக மனிதர்களின் அங்கீகாரம், சமூக அங்கீகாரம், புகழ்... என்ற படிநிலைகளைக் கொண்டது. 'சுயத்தைத் தேடுவது அவரவரின் ஆளுமையைப் பொறுத்தது. என்னிடம் ஆலோசனைக்கு வருகிறவர்களில் தொண்ணூறு சதவிகிதம் பேர் சுயமுன்னேற்ற நூல்களை வாங்கிச் சேர்ப்பவர்தான். தியானம்,யோகா போன்றவற்றில் அடிமையாகிப்போன, ஆனால், நினைப்பது எதையும் செயல்படுத்த (ஊமேஃச) முடியாத நிலையில் இருக்கின்றனர். இவர்கள் விஷயத்தில் சுயமுன்னேற்ற நூல்கள் செய்தது என்ன?''

நிறத்துக்கும் மனத்துக்கும் தொடர்பா?

''மனோநிலைக்கும் நிறத்துக்கும் உள்ள தொடர்பு சம்பந்தமாக இதுவரை பதின்மூன்று ஆராய்ச்சிகள் நடைபெற்றுள்ளதாக Wyne & Weiten என்னும் தரமான உளவியல் நூல் கூறு



● மருத்துவர் ஆனந்தன்

'சுயம்', 'முன்னேற்றம்' போன்றவற்றில் குழப்பம் ஏற்படுகிற போதுதான் ஒரு மனிதன் சுயமுன்னேற்ற நூல்களை வாங்குகிறான்; படிக்கிறான்.

கிறது. அதில் கலிஃபோர்னியா பல்கலைக்கழகம் மேற்கொண்ட ஆய்வின்படி, குழந்தைகள் நீலம், சிவப்பு... நிறங்களிலுள்ள பொம்மைகளை அதிகம் விரும்புகின்றனர். மஞ்சள் நிறம் மன அமைதியைத் தருகிறது, ப்ரௌன் - மனச்சோர்வடையச் செய்கிறது. பிங்க், நீலம் போன்ற வண்ணங்களிலான சூழல் இருக்கும் போது, ஊழியர்களின் திறன் (Productivity) அதிகரிப்பதாகவும், வெளிர் மஞ்சள் / பச்சை நிறத்திலான விளம்பரப் பலகைகள் நுகர்வோரைக் கவர்ந்திழுப்பதாகவும் தொழில் - வர்த்தகத் துறையினர் சொல்கின்றனர்!''

**- மகிமைராஜன்**

மனுஷங்க வெட்டாத அந்தக் குளத்தை சுயம்புக் குளம்னு சொல்லு வாங்க. பாக்க முக்கோணம் மாதிரியிருக்கு மாம். வாமன அவதாரம் எடுத்தப்ப கடவுள் பூமியில ஒத்தக் காலை ஊனி, மறுகாலால வானத்தை அளந்தப்ப தரையில வந்த பள்ளந்தான் அந்தக் குளம்னு ஐதீகம். குளத்தில் தண்ணியே தெரியாதபடி பாசியும் தாமரை எலையும் தோல் மாதிரி மூடியிருக்குமாம். சாவறதுக்குள்ள அந் தக் குளத்த ஒருமுறையாவது போய்ப் பார்த்துட்டு வந்துடணும் - ஊர் கண்ணுல மண்ணத் தூவிட்டு. ஊர்க்கட்டுப்பாடாம்... பொல்லாத கட்டுப்பாடு. ராத்திரியில் குளத்தைப் பாக்கப் போகக் கூடாதுன்னு. பகல்ல பாத்தா என்ன? சனியன் புடிச்ச குளம் பகல்லதான் தெரியாதே! பகல்ல அந்த எடமே புல்தரையாயிருக்குமாம் - காட்டெரும மேய்ஞ்சிக்கிட்டு. அந்தக் குளம் ஊர்ல இருந்தாலும் ஒருமுறை பாத்துடலாம். ஊர்ல இருந்து தள்ளியிருக் கிற காட்டுப் பகுதியிலிருந்து கிள்ம்பும்



# தாமரைக்காடு

ஒத்தையடிப் பாதை மேல ஏறிப் பயணம் செஞ்சா, ஒத்தத் தாலாட்டப் பாடி கொழந்த தூங்குற நேரத்துக்குள்ள பாதை ரெண்டாப் பிரியும் எடம் வரும். அங்கேயிருந்து சோத்துக் கை பக்கம் திரும்பி நடந்தா... நடந்து போறவனோட புணர்ச்சிக் காலம் எவ்வளவோ அவ்வளவு தூரத்தில் அந்த ரகசியக் குளம் கண்ணுல அகப்படும்னு சொல்லுவாங்க. ரகசியத்தைத் தேடறது எப்பவும் சொகம்தான். தேடாத வாழ்வுல என்ன தெம்பிருக்கும் சொல்லு. தேட ஏதுமில்லேன்னாலும் இருக்கிறதத் தொலைச்சிட்டுத் தேடி எடுக்கணும். இருக்கிறதைத் தேடுனா பிரயோசனம். இல்லாததைத் தேடறானேன்னு கேக் கறீங்க. காரணமிருக்கு.

''ஏய் புள்ளே உன்ன எனக்கு ரொம்பப் புடிச்சிருக்கு''ன்னு அவகிட்ட நான் சொல்ல பட்ட பாடு இருக்கே... எள நீருலேருந்து எண்ணெய் எடுத்த கதைதான். மாடு மேய்ச்சிக்கிட்டு இருந்த நான் அந்த உச்சிவெயில்ல எழுத்துக்கூட்டிப் படிக்கிற புள்ளையாட்டம் சொன்னதும், ''தப்பில் லையே'' என்றாள். மார்கழி காலத்து மோராட்டமா மனசு குளிர்ந்து போச்சு.



# அமிர்தம் சூர்யா

வான்னு கூப்பிடறாப் போல இருந்தது அந்தச் சத்தம்.

அவ சொன்னா...

''ஆறு ஓடுற இந்தப் பூமியில ஒத்த தாமரைப் பூவ தலையில வெக்க முடியல. அருபக் குளத்தைக் கண்டுபிடிச்சு ஒத்த தாமரைய எடுத்து வந்து என் தலையில வைக்கக் கூப்பிடு. தாரமா வந்து படுக்கிறேன்''னு சொல்விட்டு, கலகலன்னு சிரிச்சபடியே வந்த சுவடு தெரியாம, பூ வாசத்த அள்ளிப் போவும் காத்து கணக்கா தோழிங்களோட கலந்து போனா அந்த மேட்டுக்குடிப் பெண்ணு.

''ஆசப்படுறது தப்பில்ல... அடையத்தான் முடியாது''ன்னு சொன்னா. கருத்த மேகத்தைக் காத்து கலைச்சா போல ஆச்சு.

''என்னய உனக்குப் புடிக்கலையா, வேற சாதின்னு பாக்கறியா... இல்ல நம்பலையா?''

''காலால மிதிச்சு செஞ்ச செங்கல்ல மஞ்சகுங்குமம் வெச்சிட்டாலே மாட சாமின்னு நம்பிக் கும்புடுறவ... மனுசன நம்ப மாட்டேனா?''

''பிறவென்ன?''

''சாதி முக்கியமில்ல, சாதிக்கிறவன் தான் எனக்கு வேணும்.''

''என்ன பண்ணனும் இப்ப சொல்லு.'' நா கேக்கும் போதே ம்மா...ன்னு கொரலெடுத்தது கருத்த கறவ மாடு. வேணாம்

தோ கௌம்பிட்டேன் காட்டுப் பாதையில. ''குளத்தைக் கண்டுபிடிச்சவனோட குடும்பம் சிதைஞ்சிடும். பூவைப் பாத்தவன் புத்தி பேதலிச்சிடும். சாமியாரா கிறுக்கு பிடிச்சு சுத்தறவனுங்க பாதிப் பேரு அந்த சாபக் குளத்தில் முங்கிட்டு வந்தவனுங்கதான். அதனாலதான்டா ராத்திரியில மட்டும் தெரியற அந்த மாயக் குளத்தைப் பாக்கக் கூடாதுன்னு ஊர்க்கட்டுப்பாடு... அதை மீறாதடா''ன்னு கூட்டாளி சொன்னப்ப, மூளை செவிடான மாதிரி கேக்காம வெருட்டுன்னு கௌம்பி வந்திட்டேன்.

அந்தச் செகப்பி என் கைப்புடிச்சு நடந்தா என் சாதி சனத்துக்குப் பெருமதானே! அவளக் கட்டிப்பிடிக்கிறப்போ வெட்கப்

பட்டு, அவ சாதி கண்ண மூடிக் காணாதா? கறுப்பும் செவப்பும் கலந்தா ஆண்டவன் நெறத்துல ஒரு அவதாரம் பொறக்காதா? எட்ட எட்ட நின்ன உசுருங்கெல்லாம் மொத்தமா சேந்தா, காட்டுல மேயுற கறவக் கூட்டமாட்டம் பாக்க எம்புட்டு அழகா யிருக்கும்? கேள்விய சுமையாட்டம் தூக்கிச் சுமக்கிறேன். சும்மாடுபோல சுமைக்குக் கீழே காதலைச் சுருட்டி வெச்சிருக்கேன். சாதிக்கப் போறவனாட்டம், பௌர்ணமி சாயங்காலம் சந்தடியில்லாம கௌம்பிட் டேன்.

**கண்ணுல அகப்படாத அந்தக் குளத் தைக் கண்டுபிடிக்க இந்தப் பய ராவோட ராவா கௌம்பிப் போயிருக்கான். பௌர்ணமி நெலா தீப்பந்தமாட்டம் இவன் போற வழியெல்லாம் வெளிச்சம் காட்டியிருக்கு. தூரத்தில் பாத்தா பனமரக் காடு. பன மரங்க வரிசையா அடுக்கி நிக்க வெச்சாப் போல இருக்கு. கிட்டக்க நெருங்க, நெருங்கத்தான் தெரியுது, அது அந்த முக்கோணக் குளத்துக் கரைமேல வேலி அடைச்சா மாதிரி வௌஞ்சி கிடக்கிற பன மரங்கன்னு. ஒடம்ப ஒருக்களிச்சு மரத்து எடவெளியில உள்ள பூந்து பாத்தா... இவன் மெரண்டு போயிட் டான். கண்ணு தூண்டில்ல மாட்டிடுச்சு அந்தக் கடவுள் குளம். ஆனந்தம் தாங்க முடியல. சந்தோஷத்தில் மயக்கம் வர்றா மாதிரி ஆயிட்டது. மொத்தக் குளத்தையும்**



## சினிமா மதம்!

'ஆரண்ய காண்டம்' என்ற தமிழ்ப் படத்தின் மூலம் கோலிவுட்டுக்குள் காலடி எடுத்து வைக்கிறார் பாலிவுட்டின் டாப் ஹீரோ 'ஜாக்கி ஷெராப்'... "தமிழும் சென்னையும் எனக்கு ஒண்ணும் புதிதல்ல. கடந்த 25 வருடங்களாக நான் சென்னைக்கு வந்து கொண்டுதான் இருக்கிறேன். எஸ்.பி.சரண், 'ஆரண்ய காண்டத்தின்' கதையைக் கூறிவிட்டு இதில் நடிக்க முடியுமா எனக் கேட்டார். உடனேயே ஓ.கே. சொல்லிவிட்டேன். தமிழ்ப் படங்களின்மீது எனக்கு எப்பொழுதுமே ஒரு மரியாதை உண்டு. கோலிவுட்டில், சினிமாத் தொழில் என்பதையே ஒரு மதம் போல பாவித்து மரியாதை செலுத்துகிறார்கள். அந்த ஒரு கட்டுப்பாடும், ஒழுக்கமும், ரசிகர்கள் சினிமாக் கலைஞர்கள்மீது காட்டும் அந்த நன்றியுணர்வையும், உலகில் வேறு எந்த இடத்திலும் பார்க்கவே முடியாது. ஒரு ஹீரோவை உருவாக்கவும், உருக்குலைக்கவும் இங்கிருக்கும் ரசிகர்களால் வெகு சுலபமாக முடியும்" என கோலிவுட்டின் புகழ் பாடி வருகிறார் ஜாக்கி.

- என்.எஸ்.

''உங்க பையனைக் கொஞ்சம் கண்டிச்சு வையுங்க சார்?''

''ஏன்?''

''இந்தியாவின் தேசிய பறவை எதுன்னா... 'கொசு' என்கிறானே!''

- குலசை நஜ்முத்தீன்



உத்துப் பாக்கணும்னு தோணுச்சு. எர தேடுற பருந்து மாதிரி வானத்துல வட்ட மடிச்சிக்கிட்டா பாக்க முடியும். பரபரன்னு இவன் பனமரத்துல ஏறி உச்சியில குந்திக் கிட்டு குளத்தைப் பாக்குறான். பரந்தாம னோட பச்ச நிறப் பாதத்தில் வெள்ளையும் செவப்புமா பூவக் கொட்டி பூசித்தாப் போல இருந்ததாம் அந்தக் குளம். வெள்ளத் தாமரயும் செவப்புத் தாமரயும் மொளச்சி விளைஞ்சி கெடந்ததாம். அதுக்குப் பெறவு அவன் அதக் குளம்னு சொல்லல. தாமரக் காடுன்னுதான் சொல்ல ஆரம்பிச்சான்.

நான் பன மரத்து மேல ஏறி பாத்துக் கிட்டே இருக்கேன். பெறவு யாரோ வர்ற சத்தம் கேட்டுச்சி. கீழே பாத்துக்கிட்டே இருக்கேன். வெள்ளச் சட்டையைப் போட்ட மாதிரி உடம்பு முழுக்க நரைச்சுப் போன முடியோட, ஒரு தள்ளாத கிழவன் குளக்கரையில ஒத்தக் கால மடக்கி ஒரு கால்ல நின்னு ரெண்டு கையையும் மேலே தூக்கி கொஞ்ச நேரம் கும்பிட்டான். வயசான கொக்கு நிக்கிற மாதிரியும், மரத்து மேலே இருக்கற என்னைப் பாத்து மன்னிச்சிக்கோன்னு கேக்கற மாதிரியும் இருந்தது. அவன் உடம்பு சுருக்கத்தைப் பாத்தா நூறு வயசைத் தாண்டின மாதிரி யிருந்தது. வந்த பெரிசு இடுப்பிலிருந்த ஒரு வெள்ளத் துண்டை எடுத்து தன்னோட கண்ணைக் கட்டிக்கிட்டு, சளக்குன்னு குளத்துல எறங்கிடுச்சு குருடனைப் போல. நான் பாத்துக்கிட்டே இருந்தேன். தட்டுத் தடுமாறி கொளத்தில் நடந்தப்பத்தான் உத்துப் பாத்தேன். தாமரக் கொடிகளை முடிச்சுப் போடுறதை. வெள்ளத் தாமரக் கொடியை செவப்புக் கொடியோடு முடிச்சு போடுறதும், ஏற்கெனவே முடிச்சு போட் டிருந்த கொடிகளை அவிழ்த்து விடுறதுமா பரப்பரன்னு அவரோட கைங்க இந்தக் கரைக்கும் அந்தக் கரைக்குமா உலாவிக் கிட்டு இருந்தது குளத்துக்குள்ளேயே. சில நேரம் பக்கத்திலேயே முடிச்சுப் போட்டது. சில நேரம் இந்தக் கரை வெள்ளத்தாமரய அடுத்தக் கரை செவப்புத் தாமரக் கொடி யோடு பின்னி விட்டுச்சு. என்ன இவன் கிறுக்கு பிடிச்ச கிழவனா இருக்கான், யாரு இவன்னு யோசிக்கும்போதே ஒரு வெள் ளத்தாமரையப் புடுங்கிக் கரைமேல வீசினாரு. பெறவு ஒரு செவப்புத் தாமரையப் புடுங்கி வீசுனாரு. எனக்குத் தலை கிறுகிறுன்னு சுத்திச்சு.

இந்த மாடு மேய்க்கிற பயலுக்கு வெவரம் போதாது. ஊருக்குள்ளே ஒரு பையன் வாலிபனா வளந்து அவன் ஆம்பள அந்தஸ்து அடையறப்போ ஒரு வெள்ளத் தாமரை மொளைக்குமாம். பொட்டச்சி

பூப்பெய்தி நின்னா குளத்தில செவப்புத் தாமரை மொளைக்குமாம். கொடியக் கொடியோடு இணைக்கிறது கல்யாண பாக்கியம். பிரிக்கிறது முறியற தைக் குறிக்குமாம். அந்தக் கிழவன்தான் பிரம்மனாம். அந்தக் குளத்துக்கு ரகசியக் குளம், சாபக்குளம், சுயம்பு குளம், முக் கோணக் குளம், தாமரக் குளம்னு என் னென்னவா பேரு வைச்சாலும் உண்மை யான பேரு உறவுக்குளம்தான். அந்தக் கிழவரு தூக்கிப்போட்ட வெள்ளத் தாமர யும் செவப்புத்தாமரயும் கரைமேல விழுந்ததும், இவன் மரத்து



மேலே இருந்து தலை சுத்தி பொத்துன்னு விழுந்து இருக்கான். சட்டென குளம் மறைஞ்சு புல்தரையா மாற, சரக்குன்னு புல்ல மேஞ்சிக்கிட்டு இருந்த காட்டெரும வெள்ளதாமரய கொம்பாலயே பிச்சுப் போட்டிருக்கு. இவன் ஓடிப்போய் புல் தரையில இருந்த தாமரப் பூவ கையில எடுத்து ஊர நோக்கி ஓடி வர்றான். கட் டாயக் கல்யாணத்துல இஷ்டமில்லாம இந்தப் பயல மணகல நெனைச்சுக்கிட்டு இருந்த மேட்டுக்குடிப் பொண்ணு குப் புன்னு நெருப்புல பூந்துட்டத தெரியாம பூவத் தூக்கிட்டு ஓடி வந்திருக்கிறான்.

குய்யோ முறையோன்னு இவனோட சொந்த பந்தம் கத்திக்கிட்டு ஓடி வந்தது... வெரல கெட்டியா மடிச்சிக்கிட்டு செந் தாமரங்கிறான். பார்த்தா வெறுங்கையா யிருக்கு. கையில பூவிருக்கிறது அவனுக்கு மட்டும் தெரியுமோ என்னவோ... அவ னோட ஆத்தா அலறி அழுதா. "கிருஷ்ணா படிக்கப் படிக்கச் சொன்னனே கேட்டியா, பைத்தியமா அலையவா உன்னப் பத்து மாசம் சொமந்தேன். தேடாதேன்னு சொன் னேனே எமனத் தேடிக்கிட்டியே."

கிருஷ்ணன் பைத்தியமானத நம்பாம

**ஒரு பையன்
ஆம்பள அந்தஸ்து
அடையறப்போ
ஒரு வெள்ளைத் தாமரை
மொளைக்குமாம்.
பொட்டச்சி பூப்பெய்தி
நின்னா குளத்தில்
செவப்புத் தாமரை
மொளைக்குமாம்.**

கறவை மாடுகள் அவனைச் சுத்தி நின்னுக் கிட்டு இருந்துச்சு. கிருஷ்ணனப் பாத்துக் கிட்டே இருந்தேன் - அவனோட கையில மொத முறையா தாமரப் பூ தெரிஞ்சது எனக்கு. அது பூதானா... இல்லயேன்னு உத்துப் பாத்தா... அவனோட கையில் செவப்பா கொழுந்து விட்டு... சாவறதுக்கு அவங் காதலி புகுந்த நெருப்பு அணையா விளக்கு போல எரிஞ்சுக்கிட்டே இருந்த தைப் பாத்தேன். இத யாருக்கிட்டேயும் சொல்லாதீங்க நம்மளயும் பைத்தியம்னு சொல்லுவாக. ●



# உடல் பருமன் மூட்டு வலி முற்றிலும் நீங்க...

**சென்னை தி.நகரில் "ஸன்ரைஸ் ஹெர்பல் கிளினிக்" என்ற பெயரில் மூலிகை மருத்துவம் – ஆன்மீக மருத்துவம் செய்துவரும் டாக்டர் ஆர். பானுமதி...**

"சையாட்டிகா" என்பது தொடை நரம்பு பாதிக்கப்பட்டதால் ஏற்படும் ஒரு விதமான வாதம். இந்த வாதம் ஏற்பட்டவர்களுக்கு முழங்கால் வலி மற்றும் வீக்கம், பாதத்தில் எரிச்சல் இருக்கும்.

"மூட்டுவலி" ஏற்பட முக்கிய காரணங்கள் வாதம், பித்தம் அதிகமாவது தான் மேலும் உடலில் 'கால்ஸியம்' குறைவதால் மூட்டுகளில் உள்ள ஈர பசை உலர்ந்து விடுவதும் கூட காரணமாகலாம்.

இந்த மாதிரி மூட்டுவலி வந்தால் 7 நாட்களுக்கு ஆயில் மசாஜ், மூலிகை ஒத்தடம் தருகிறோம். உள்ளுக்கு சாப்பிட மருந்து தருகிறோம். இந்த மருந்துகள் "கால்ஸியம்" உற்பத்தியைச் சரி செய்து, மூட்டுகளில் ஈரபசை கூடுதலாக உருவாகிறது. தேய்மானம் இல்லாமல் எலும்புகளில் இடைவெளி, நெர்வஸ் பிரச்சனைகள் எல்லாவற்றிற்கும் மூலிகை மருந்து, செராஜும் மிஷின் மூலம் சரி செய்கிறோம்.

ஆயுர்வேத மருந்துவத்திற்கு முறைப்படி பயிற்சி எப்படி பெற்றீர்கள்...?

என் மாமனார் மகான் ஸ்ரீ காரைச்சித்தர் அருளால் பாரம்பரிய வைத்திய முறைப்படி சித்தா, ஆயுர்வேதம், மூலிகைகள், யோகா போன்ற சிகிச்சைகளின்படி பலதரப்பட்ட சிறப்பு வைதியர்களின் ஆலோசனைப்படி, நோய்களை குணப்படுத்துகிறோம்.

இது இயற்கை வைத்தியமா? என்று கேட்டால், ஆன்மீக முறைப்படி இது இயற்கை வைத்தியம் என்று சிரிக்கிறார்.

இவையில்லாமல் வேறு என்ன சொல்கிறீர்கள்?

மூலிகைகள், காய்கறிகள், கனிகள், இயற்கை உரம் போன்றவை நம் உடலை நோய் வராமல் பாதுகாக்கிறது. அத்தகைய இயற்கையை பாதுகாக்க நாம் இயன்ற அளவு பாடுபட வேண்டும். இல்லையேல் இயற்கை அழிந்து செயற்கை கலவை கலந்து விடும். இயற்கை, மூலிகைகள் போன்றவைகளை பாதுகாக்க நாங்கள் "உணவே மருந்து" என்ற அடிப்படையில் உடல் எடை குறைய, அதிகரிக்க, சர்க்கரை நோயை கட்டுப்படுத்த, கிட்னி பிரச்சனைகள் சரிவர, குழந்தைகளுக்கு ஊட்டம் அளிக்க - உணவு வகைகளை அளிக்கிறோம். இவையில்லாமல் தலை பாராமரிப்பு, முக பராமரிப்பு, சைனஸ், கேஸ்டிரபல், பெண்களின் மாதவிடாய் கோளாறுகள், கற்கள், கட்டிகள், மார்பக வளர்ச்சி, குடி, போதை பழக்கங்கள் அறவே போக்க, போன்ற அனைத்து பிரச்சனைகளுக்கும் எங்களிடம் மருத்தும் உண்டு என்றார்.

**Dr. R. Bhaanhumathy**

பு.எண். 15, மன்னார் தெரு, தி.நகர், பஸ் ஸ்டாண்டு எதிரில், சென்னை - 600 017.

**போன்: 6534 1646 செல்: 90031 95545, 94443 38713**

Advt.

**கோவை தொடர்புக்கு: 99943 27016**

ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி இன்று தலை கவிழ்ந்து கிடக்கிறது. தென் ஆப்பிரிக்காவுடனான டெஸ்ட் மற்றும் ஒருநாள் போட்டிகளில் தோற்றுப் போயிருக்கிறது. அதுவும் தன் சொந்த மண்ணில். ஒரே அணி தொடர்ந்து வெற்றிகள் குவித்துக் கொண்டிருப்பது கிரிக்கெட்டுக்கு நல்லதில்லை என்பதால், தென் ஆப்பிரிக்காவின் விஸ்வரூபத்தை வரவேற்கலாம். அதேசமயம் ஒரு காலத்தில் இந்திய அணி எல்லாப் போட்டிகளிலும் தோற்றுப் போகுமே அது போலொரு பரிதாப நிலைமை ஆஸ்திரேலிய அணிக்கு ஏற்பட்டிருக்க வேண்டாம். காரணம், இதர கிரிக்கெட் நாடுகளுக்கு கிரிக்கெட் நேர்த்தியைக் கற்றுத் தந்த தேசம் அது. தனிப்பட்ட சாதனைகளுக்கெல்லாம்

# ஆஸ்திரேலியாவின்





புதிய வீரர்கள் இந்திய அணிக்குத் தேர்வாகும்போது ஒரு கிளர்ச்சி ஏற்படும். எந்த வீரருக்குள் இன்னொரு சச்சினோ கபில்தேவோ மறைந்திருப்பார் என்று யார் கண்டார்? இதனால் பார்க்கிற எல்லா புது வீரர்கள் மீதும் அசாத்திய நம்பிக்கை வைப்போம். இப்போது அந்தப் பரிபூரண நம்பிக்கை ரவீந்திர ஜடேஜா மீது ஏற்பட்டுள்ளது. இந்தியாவின் வருங்கால சூப்பர் ஸ்டார் என்று ஷேன்வார்னேயிடம் சென்ற வருடம் பாராட்டுப் பத்திரம் வாங்கிய வர் ஜடேஜா. இந்திய அணியில் ஆல் ரவுண்டர் இல்லாத பெரும் குறையைத் தீர்க்க வந்த புண்ணியவானாகப் பார்க்கப்படுகிறார். இடதுகை வீரரான ஜடேஜா, நல்ல ஸ்பின்னர் மற்றும் பொறுப்பான ஆட்டக்காரர். இந்த வருட ரஞ்சி ஆட்டங் களில் ஜடேஜா குவித்த ரன்களும் [739] வீழ்த்திய விக்கெட்டுகளுமே [42] இன்று அவரை ஸ்ரீலங்கா அனுப்பியிருக்கிறது. சௌராஷ்டிரா போன்ற சிறுநகரிலிருந்து கிளம்பிய ஒரு வீரருக்கு இப்படியொரு எதிர்காலம் கணிக்கப்படுவது, உடன் மையிலேயே வரவேற்கப்படவேண்டியது தான். ●



● ரவீந்திர ஜடேஜா

விளையாட்டு சேனல்களில் நேரடி ஆட்டங்கள் இல்லாத சமயங்களில் பழைய மேட்சுகள் தூசு தட்டப்படும். அப்படிச் சமீபத்தில் காண்பிக்கப்பட்ட ஒரு ஆட்டம், சென்னையில் டை ஆன இந்தியா – ஆஸ்திரேலியா டெஸ்ட் மேட்ச். ஆட்டம் முடிய இரண்டு பந்துகள் மீதம் இருந்தபோது ஸ்கோர் சமநிலை ஆனது. அப்போது பார்த்து மனிந்தர் சிங் எல்.பி.டபிள்யூ முறையில்

ஆஸ்திரேலிய அணியில் இடம் கிடையாது. அணியின் வெற்றிக்காக உடல், பொருள், ஆவி அனைத்தையும் துறப்பது எப்படி என்பதை ஒவ்வொரு ஆட்டத்திலும் நிரூபித்துக் காட்டியவர்கள் ஆஸ்திரேலிய வீரர்கள். இன்று பாருங்கள், அந்த அணிக்கு ஒரு இரங்கற்பா எழுதும் படி ஆகிவிட்டது. ஆனால் ஒன்று, ராஜா போல வாழ்ந்து தொலைதூரப் புள்ளியாய் மறைந்து போன மேற்கு இந்தியத் தீவு அணியின் நிலைமை ஆஸ்திரேலியாவுக்கும் பரவி விட்டால், அது கிரிக்கெட்டின் போறாத காலமாகவே எண்ணப்படும். ●



# போறாத காலம்!

ச. ந. கண்ணன்



அவுட் ஆன போது, பல இந்திய ரசிகர்கள் நெஞ்சு வலிக்கு உள்ளானார்கள். அந்த நொடியில் சென்னை டெஸ்ட் மேட்ச் சரித்திர முக்கியத்துவம் பெற்றது. அந்த ஆட்டம் பற்றி நினைவலைகளில் மூழ்கிய ரவி சாஸ்திரி (இவர் மறுமுனையில் இருந்தவர்), 'அந்தப் பந்து மனிந்தர் சிங் காலில் படுவதற்கு முன்னால் பேட்டின் முனையை உரசியது. இதனால் நடுவரின் தவறான தீர்ப்பில் கோபமான நான், ஆட்டம் முடிந்தவுடன் அம்பயர் விக்ரம் ராஜு அறைக்குச் சென்று காச் மூச் என்று கத்தினேன். நினைத்துப் பாருங்கள். இன்றைக்கெல்லாம் நடுவரின் தீர்ப்புக்கு மைதானத்தில் முகத்திலோ உடல்மொழியிலோ வருத்தம் தெரிவித்தால், உடனே அந்த வீரருக்குக் கடுமையான அபராதம் விதிக்கப்படும். ஆனால் இந்த நெருக்கடி இல்லாத காலகட்டத்தில் நடுவரின் அறைக்கே சென்று வாதிடும் அளவுக்குச் சுதந்திரம் வழங்கப்பட்டிருந்தது' என்றார். பாவம், கம்பீருக்கு இந்தக் கொடுப்பினை எல்லாம் கிடைக்கவில்லை. ●



## சுதா சேஷய்யன்

### நினைவூட்டும் நாயகி

**ம**ஹாபிரளயஸாக்ஷிணி - இது ஏற்கெனவே நாம் அனுபவித்த விஷயம்தான். மஹாபிரளய காலத்தில், மஹாகாமேசுவரர் மஹாதாண்டவம் ஆடும்போது, அந்த மஹாதாண்டவத்துக்கு சாக்ஷினியாக இருக்கக்கூடியவள்- பிரளயக் காலத்தில் ஊழி முதல்வனுக்கு சாக்ஷினியாக இருக்கிறவள்.

ஊழிக் காலத்தில், எல்லாமே ஒடுங்கிப் போகும். ஊழி முதல்வன் மட்டும்தான் இருப்பார். அந்த ஊழி முதல்வனிடமிருந்து மறுபடியும் இந்த உலகம் சிருஷ்டிக்கப்படவேண்டும். அவரைத் தனியாகவிட்டால், மறந்து விடுவாராம்! அவர் பாட்டுக்கு யோகத்திலே போய் அமர்ந்துவிடுவார். அப்படி யோக தக்ஷிணாமூர்த்தியாகப் போய் உட்கார்ந்தால், ஒன்றும் நடக்காது! இந்த உலகிலே சிருஷ்டி நடக்கவேண்டும் என்பதற்காகத்தானே சிவப்பரம்பொருளின் தவத்தைக் கலைக்க மன்மதனை ஏவினார்கள்?

குமார சம்பவத்திலே காளிதாஸர் சொல்வார்: தக்ஷிணாமூர்த்தி போய் உட்கார்ந்துவிட்டார். ஹிமவான் மகளாக, உமாதேவியும் இமயமலைக்குத் தவம் செய்யப் போனாள். அம்பாளும் தவக் கோலத்தில், தக்ஷிணாமூர்த்தியும் தவக்கோலத்தில்! உலக இயக்கம் ஸ்தம்பித்தது; சிருஷ்டியே நடக்கவில்லை! ஆண் யானைகளும் பெண் யானைகளும் போயின. ஆண் குயில்களும் பெண் குயில்களும் போயின. ஆனாலும் சிருஷ்டி எதுவும் நடக்கவில்லை! அவரவர்கள் மனோரீதியாக தவத்தில் இருந்துவிட்டார்கள். ஜகத் வியாபாரம் நடக்க வேண்டுமானால் மீண்டும் சிருஷ்டி நிகழ வேண்டும் என்பதற்காகத்தான் மன்மதனை ஏவினார்கள்.

அம்பாள், அந்த மன்மதனின் ஆயுதங்களையே கைகளில் தரித்தவள் என்றால், இந்த உலகில் உள்ள ஆன்மாக்கள் மீண்டும் பிறக்க வேண்டும்; சிருஷ்டி சுழற்சி தொடர வேண்டும் என்பதற்காகத்தான். ஆகவே அவள் மஹாதாண்டவ சாக்ஷினியாக இருந்துகொண்டு, ஊழித் தாண்டவமாடும் ஊழி முதல்வனான சிவப் பரம்பொருளிடத்தில் நினைவூட்டுகிறாள். அவர் எல்லாவற்றையும் மறந்து ஆடிக்கொண்டிருக்கிற போது, எப்போது நினைவூட்ட வேண்டுமோ, அப்போது நினைவூட்டி, ஜகத் வியாபாரம் தொடரச் செய்கிறாள்.

# உமா ஹைமவதி

**சா**க்ஷினி என்ற திருநாமம் அம்பாளுக்குத் திரும்பத் திரும்ப வரும். இதற்கு இன்னொரு அர்த்தம். எல்லாவற்றையும் தனக்குள்ளேயே பார்க்கக் கூடியவள் என்பது. எப்படி

## ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம் 20



மத்தாவாக இருக்கிறாள் என்றால், தேன் ஸ்வருபமாக - மது ஸ்வருபமாக - இருக்கிறாள் என்று பொருள். 'மயக்கத்தைத் தரக் கூடியவள்' என்றும் இந்தத் திருநாமத்துக்குப் பொருள் கொள்ளலாம். என்ன விதமான மயக்கம்? மதி மயங்கிப் போவது என்று இதற்கு அர்த்தம் இல்லை. அம்பாளுடைய சைதன்யத்தை அனுபவித்தால் அதற்கப்புறம் ஒன்றுமே வேண்டாம் என்கிற நிலைமை. ''அது மட்டுமே போதும்'' என்று நாம் சொல்கிறோம் இல்லையா! அது போல், அதிலேயே அமிழ்ந்து போய், அந்த அனுபவம் கிடைத்துவிட்டது என்றால், அதைத் தாண்டி வேறு எங்கும் போகத் தோன்றாது என்கிற அளவில் மத்தாவாக இருக்கக் கூடியவள்.

**மஹா கைலாஸ நிலையா** - கைலாஸத்தில் உறைகிறாள்.

**ம்ருணால ம்ருதுதோர்லதா** - தாமரைத் தண்டின் மென்மையைப் போல் தன் கைகளில் மென்மை படைத்தவள்.

**மஹனீயா** - எல்லாவற்றையும் விட உயர்ந்தவள்.

**தயாமூர்த்தி** - தயையை - கருணையை உடையவள்; அதை நமக்குக் குறைவின்றித் தரக் கூடியவள்.

**மஹாஸாம்ராஜ்யசாலினி**- ஏற்கெனவே **மஹாராக்ஞீ** என்றுதான் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் ஆரம்பிக்கிறது. ஒரு மஹா ஸாம்ராஜ்யத்தை - ஸ்ருஷ்டிக்கும் அதற்கு அப்பாலும் உள்ளவற்றை - ஆள்பவள் அம்பிகை.

பக்தர்கள் எல்லாவற்றையும் அம்பாளுக்குள்ளும், எல்லாவற்றுக்குள்ளும் அம்பாளையும் பார்க்கிறார்களோ, அப்படி அம்பாள் தனக்குள்ளேயே எல்லாவற்றையும் பார்க்கக் கூடியவள்.

இந்தத் திருநாமத்தோடு இணையான திருநாமம் **பச்யந்தி**. பச்யந்தி என்கிற வாக் ஸ்வருபமாக இருக்கக் கூடியவள் என்று இதற்குப் பொருள். எல்லாவற்றையும் பார்க்கக் கூடியவள் என்றும் பொருள். ஒரே சமயத்தில் எல்லாவற்றையும் பார்த்து, எது எது எப்படி நடக்க வேண்டுமோ அதை யதை நடத்துவிப்பதற்காக கருணை பார்வையினால் பார்ப்பவள்.

அப்படி இருப்பவள் **மஹா பிரளய ஸாக்ஷிணி**.

அடுத்து வரும் திருநாமங்கள் **பரா சக்தி, பரா நிஷ்டா, மத்தா...**

## வித்யா நாமங்கள்

**ஆத்மவித்யா, மஹாவித்யா, ஸ்ரீவித்யா, காமஸேவிதா. காமஸேவிதா** என்றால் மன்மதனால் ஆராதிக்கப்படக் கூடியவள்.

'வித்யா' நாமங்கள் எதைக் குறிக்கின்றன? சாதாரணமாக நான்கு விதமான வித்யைகளை அம்பாள் உபாஸகர்கள் சொல்வார்கள்.

யாக வித்தை - அல்லது யக்ஞவித்தை. யாகங்களைச் செய்வது. அவை பற்றிய அறிவு. குஹ்ய வித்யை - குகையைப் பற்றியது. குகை என்றால் ரகசியமானது என்று அர்த்தம் - ரகசிய மந்த்ரங்களை, அதன் பொருளை, சரியாக உணர்ந்து மந்த்ர பூர்வமாக அம்பாளை உபாஸிப்பது. உபாஸனா வித்யை என்று ஒன்று உண்டு. பூஜைகள், சடங்குகள் மூலமாக அம்பாளை உபாஸிப்பது உபாஸனா வித்யை. ஆக, யாகத்தின் மூலமாகவும், ரகசியபூர்வமான மந்திரங்கள் மூலமாகவும், உபாஸனை விதிகளின்படி பூஜைகள் செய்தும் அம்பாளை உபாஸிக்கலாம். இவற்றையெல்லாம் தாண்டி இருக்கக்கூடியது ஆத்ம வித்யை - பரம்பொருளாக, பிரம்மமாக இருக்கக்கூடிய அம்பிகையை உணர்கிற வித்யை.

**ஊழிக்காலத்தில் ஊழி முதல்வன் மட்டும்தான் இருப்பான். இவரிடமிருந்துதான் இவ்வுலகம் மறுபடி சிருஷ்டிக்கப்பட வேண்டும்.**

எவ்வளவுதான் படித்திருந்தாலும், ஒருத்தர் அம்பாளை உணர்ந்திருப்பார் என்று சொல்லிவிட முடியாது. அம்பாளுக்கே, குருவாக இருப்பவள் என்று ஒரு திருநாமம் உண்டு.

அம்பாள் குருவாக வந்ததை உபநிஷதம் ஓர் அழகான கதையாகச் சொல்கிறது.

அம்பாளுக்கு உமா ஹைமவதி என்று ஒரு திருநாமம் உண்டு. ஹிமவானுக்கு மகளாகப் பிறந்தபோது உமா என்கிற ஒரு திருநாமம் அம்பாளுக்கு. இந்த உமா என்ற திருநாமத்தோடு ஹைமவதி என்பதும் சேர்கிறது. ஹைமவதி என்றால் தங்க ஸ்வரூபமாக இருப்பவள். ஹிமவானுடைய மகள் என்பதாலும் ஹைமவதி.

ஆனால், ஹிமவானுடைய மகளாகத் தோன்றுவதற்கு முன்பாகவே உமா ஹைமவதி என்று அவளுக்கு ஒரு ஸ்வரூபம் உண்டு. அது ஆத்ம வித்யையை, பிரம்ம வித்யையை உபதேசித்த ஸ்வரூபம். அதனால்தான் ஆத்ம வித்யாவாக அவளை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் குறிப்பிடுகிறது.

## தேவர்களின் கர்வம்!

**தே**வ லோகத்தில் இருக்கக் கூடியவர்களுக்கு ஒருமுறை ஆணவம் பிறந்தது. 'எங்களுக்கு எல்லாமே இருக்கிறது. நாங்கள்தான் அம்ருதம் சாப்பிட்டிருக்கிறோம். எங்களை ஒருத்தரும் ஒன்றும் செய்ய முடியாது. எங்களுக்கு ஏதாவது ஒரு பிரச்னை என்றால் மஹா விஷ்ணுவே சண்டைக்கு வருகிறார்; குமாரக் கடவுள் தோன்றி, எங்கள் சைனியத்துக்குத் தலைமை தாங்கிப் போரை நடத்துகிறார். நாங்கள் அம்ருதம் சாப்பிட்டிருக்கிறோம். நாங்கள் என்றும் உயிர் வாழக்கூடியவர்கள்; எங்களுக்கு முதுமை கிடையாது; என்றும் யௌவனத்தோடு இருப்போம்... எங்களிடம் கல்பக விருக்ஷம் இருக்கிறது. கேட்டதையெல்லாம் அது கொடுக்கும்' என்கிற மமதை வந்தது. ***(வளரும்)***

# சினி சிப்ஸ்

நியூஸ் பாய்

- 'அழகிய தமிழ் மகன்', 'வில்லு' என... 'டபுள் ஆக்ட்' கொடுத்த படங்கள் பேர் சொல்லும் அளவில் வெற்றி பெறவில்லை என்பதில் கொஞ்சம் அப்செட்டாக இருக்கிறார் விஜய். அந்த நேரம் பார்த்து கமர்ஷியல் டைரக்டர் அரசு 'டபுள் ஆக்ட்' சப்ஜெக்ட் என்று கதவைத் தட்ட, மனிதரைக் காய்ச்சி எடுத்து விட்டாராம் இளைய தளபதி!

**(இதுதான் டபுள் ஆக்ட் கொடுமை!)**

- 'சென்னை-28' கொடுத்த ஆரவார வெற்றியைத் தொடர்ந்து எஸ்.பி. சரண், 'குங்குமப் பூவே கொஞ்சும் புறாவே!' படத்தைத் தயாரிப்பது அனைவரும் அறிந்ததே. அந்தப் படமும் திருப்தியாக வந்திருப்பதால், அடுத்த படத்துக்கும் பூஜை போட்டாயிற்று. அதில் எஸ்.பி.பாலசுப்ரமணியம் பாடகர் கேரக்டரில் நடிக்கிறாராம்!

**(அப்பாவுக்கு மகன் கொடுக்கும் சான்ஸ்! நல்லாருக்கே!)**

- 'சிகப்பு ரோஜாக்கள்' படத்தை ரீமேக் செய்யும் ஆலோசனையில் இருக்கிறதாம் 'ஃபிலிம் அவார்டு' பெயர் கொண்ட பட நிறுவனம். படத்துக்கு ஹீரோவாக யாரை புக் செய்யலாம் என ஆலோசனை செய்ததில் விரல் நடிகருக்கு அடித்ததாம் லக்!

**(அவர் நடிக்க வேண்டியதே இல்லையே!)**

- நடிகை பாவனாவுக்கு ரிலீஸ் பண்ண கைவசம் படம் ஏதுமில்லை. ஆனால் அம்மணி அதுகுறித்து கவலை கொள்ளாமல் 'கவிதை புத்தகம்' ரிலீஸ் பண்ணுவதில் குறியாய் இருக்கிறாராம்! ஆச்சர்யமாகக் கேட்டால், ''நான் பத்தாவது படிக்கையிலேயே கவிதாயினி ஆயிட்டேன்'' என்று காது கடிக்கிறார்!

**(அப்ப, படத்துக்குப் பாட்டு எழுதலாமே!)**

அருள்வாக்கு

# ரட்சிப்பு!

குருடன் ஒருவன் கையில் லாந்தருடன் போய்க் கொண்டிருந்தானாம். எதிரில் வந்த ஒருவன், ''உனக்குத்தான் கண் தெரியவில்லையே, லாந்தர் ஏன் எடுத்து வருகிறாய்?'' என்று கேட்டான். அதற்குக் குருடன், ''எனக்குக் கண் இல்லாவிட்டாலும் உனக்குக் கண் இருக்கிறது அல்லவா? அதற்காகத்தான் இதை எடுத்து வருகிறேன். இல்லாவிட்டால் இந்த இருட்டில் நீயே என்மேல் தடுக்கி விழுந்திருப்பாயே'' என்றானாம். அது போலவே பழைய சாஸ்திரங்கள் நமக்குப் புரியாவிட்டாலும், எதிர்காலத்தில் யாருக்காவது புரியலாம், பயனாகலாம் என்பதனாலாவது அவற்றை நாம் ரட்சித்தாக வேண்டும். ''வசதியே இல்லாத காலங்களில் யுகாந்தரமாக ரட்சிக்கப்பட்ட சாஸ்திரங்களை நமக்கு முதல் தலைமுறையினர் எல்லா வசதியிருந்தும் காப்பாற்றாமல் அழித்து நம்மை வஞ்சித்து விட்டார்கள்'' என்று வருங்காலத் தலைமுறையினர் நம்மைக் குற்றம் சொல்ல இடம் வைக்கலாமா?

எத்தனை இடையூறு இருப்பினும், நமக்கு எதிர்காலத்தினரிடம் உள்ள கடமையையும் பொறுப்பையும் உணர்ந்து பழைய சாஸ்திரங்களை ரட்சித்துத் தரவேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

3

# பாரதிபாலன்

தெருவிளக்கு எரியத் தொடங்கிற்று. காக்காய் வலிப்புக்காரன் மாதிரி, ஏழு எட்டுத் தடவ வெட்டி வெட்டி இழுத்திற்று. பின்பு பக்கென்று வெளிச்சம் நின்று கொண்டது. இன்றைக்கு என்னவோ எரியாத தெரு விளக்குகள் கூட எரிகின்றன.

வீரணத் தேவர் வீட்டு வாசலில் இருக்கும் ஆட்டொரல் பொங்கிய மணியமாகவேதான் இருக்கிறது. அரிசியும் உளுந்தும் அரைபட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. நல்லது பொல்லதுக்கு எல்லார் வீட்டிலும் இட்லிதான். எப்படா 'ஆடி' வரும், பொங்கல் வரும். தீபாவளி வரும் என்று இந்த இட்லிக்குத்தான் தொன்னாந்துகிட்டுத் திரியும்.

மதியமே ஆட்டொரலைச் சுற்றி வட்டம் கூடிவிட்டது; இது பெரிய உரல்; பத்துப் பதினைந்து இளந்தாரிகள் நகட்டினால் கூட முடியாது; அத்தனை பெரிசு. அதுவும் மண்ணோடு மண்ணாகப் புதைந்திற்று.

கோவிந்து வீட்டு நடைவாசலும் நிறைந்துவிட்டது. ஒரே பேச்சு சப்தம். கோவிந்து நாகுவைப் பார்க்க வந்தான். வீரணத் தேவர் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள ஆட்டொரலைச் சுற்றிலும் ஒரு கூட்டம். நாகு வீட்டுத் திண்ணைக்கு வந்தான். பெண்கள் நடமாட்டம் கூடுதலாக இருந்தது. ஏழு எட்டுப் பேர் கையில் சர்வச் சட்டி, குண்டாச் சட்டி என்று இடுக்கியிருந்தார்கள். கோவிந்து நடை தயங்கிற்று. கோவிந்துவைப் பார்த்ததும் வாசலில் விளையாடிக் கொண்டிருந்த ஒரு சிறுமி நாகு வீட்டுக்குள் ஓடிற்று. சற்று நேரத்தில் நாகு வெளியே வந்தான்.

''போலாமா?''

''ந்தா, வர்றேன்'' என்று வீட்டுக்குள் போனான். கோவிந்து தெருவையே பார்த்துக்கொண்டு நின்றான்.

''யாரது! பவுனா?''

''அக்காவா?''

''ஆடிக்கு வந்நீகளாக்கும்; எப்ப வந்நியாம்?''

''மத்தியானம்.''

''நல்லா இருக்கிலெ?''

''இருக்கோம்கா.''

''சும்மாதான் இருக்கியாக்கும்?''

''மாசமா இருக்கேக்கா.''

''அப்புடீயா சந்தோசம்.ஆடிக்கு நல்லா கறி புளிய வெச்சுச் சாப்புடுங்க...''

பவுனு சிரித்தான்.

நாகு செருப்பை மாட்டிக்கொண்டு வந்தான். இருவரும் ஆற்றுக்கு நடந்தனர். மாலை நேர நடை. இந்த மாலை நேர நடைதான் மனசுக்கு இதம். எத்தனை சலிப்பும் சோர்வும் இருந்தாலும் மாலை நேர நடை மருந்தாகிவிடும். நடந்தார்கள்.

**பத்துப் பதினைந்து இளந்தாரிகள் நகட்டினால் கூட முடியாது; அத்தனை பெரிசு. அதுவும் மண்ணோடு மண்ணாக புதைந்திற்று.**

பாவம் அந்தப் பெண்! தான் ஒரு மனுஷி என்று படவேண்டாம்? தான் ஓர் உயிர் என்று படவேண்டாம்? ஏன் அந்தப் பெண் யோசிக்கவில்லை? 'வாழ்ந்தால் உன்னோடுதான்' என்று ஒத்தைப் பதிலாய் நிற்க வேண்டாமா? ஏன் அப்படி முடியவில்லை? பழகும்போது என் கறுப்பு



# காற்று வரும் பருவம்!

உன் கண்ணில் படவில்லை? அசிங்கமான என் தெருவும், குப்பைக்கூளமும் சகதியுமான என் தெரு அப்போது ஏன் உறுத்தவில்லை?

என் அப்பன் தண்ணி கட்டுக்காரன்தான். மேல் சட்டை இல்லாத ஆள்தான். லங்கோடு கட்டிக்கொண்டு கூப்பிட்ட குரலுக்கு ஓடுகிற ஆள்தான். என் ஆத்தா நொச்சி விளாறில் கூடை பின்னி, தெருத் தெருவாய் கூவிக்கூவி விற்பவள்தான். இது எல்லாம் உனக்குத் தெரியாது? புத்தியைக் கத்தரித்துப் போட்டு விட்டாயா முட்டாளே! என்று குமட்டில் இடிக்க வேண்டாம்? பத்தாயிரம் என்று ஊர்க் கூட்டம் பைசல் பண்ணியவுடன் ஏன் தலையசைத்தாய்?

இனி எப்படி அவன் வீதியில் நடப்பான்? ஊர் தேசமென்று போய் ஒளிந்து கொள்வானோ? குகைக்குள் பம்மிக் கொள்வானோ? இல்லை. உயிரை முடித்துக் கொள்வானோ? கோவிந்துதான் நிம்மதியற்றுத் திரிந்தான். ஆனால் அப்படி ஒன்றும் நடக்கவில்லை. அவனும் அசட்டுச் சிரிப்புச் சிரிச்சுகிட்டுத் திரிந்தான். அவளும் தலையைக் குனிந்து கொண்டுதான் தெருவில் நிற்கிறாள். நடக்கிறாள்.

''அசிங்கமா இல்லையா நாகு?''

''யாருக்கு?''

''அவனுக்கும் அவளுக்கும்.''

நாகராஜன் சிரித்தான். இருளில் அந்தச்



"எப்பலேர்ந்து உங்களுக்கும், உங்க மனைவிக்கும் கருத்து வேறுபாடு ஆரம்பிச்சது...?"

''எங்கே?''

'ரோதையிலெ...''

''என்ன சொல்லுச்சு...''

''சிரிச்சுச்சு.''

''வேற?''

''ஒரு சிரிப்புதான். ஏதோ நெறைய பேசிட்டாப்புலெ அதுக்கு திருப்தி. கூட எங்கம்மா இருந்துச்சு. நெல்லு அரைக்கப் போனோம். அது சோளம் அரைக்க வந்துச்சு. கூட்டம் கிளம்பும்போது தலையசைத்தேன். அதுக்கும் சிரிப்புத்தான்.''

''ம்.''

''நம்மளைப் பெரிசா நினைக்குறாப் புலெ.''

''எதுக்கு?''

''இம்புட்டுப் படிச்சுட்டு சும்மா இருக்கோமேன்னு...''

கோவிந்து முகத்தில் குறுநகை ஓடிற்று.

''வேலை கிடைச்சா போக மாட்டமா?'' என்றான் நாகு.

''நான் போக மாட்டேன் நாகு.''

''அந்தத் தெளிவுகூட இல்லையே எங்கிட்டே.''

''டி.என்.பி.சி. எழுதினே?''

''டி.என்.பி.சி. மட்டுமா? பி.எஸ்.ஆர்.பி. ஏன்? யு.பி.எஸ்.ஸி.கூட ஒண்ணு எழுதிட் டேன். எங்கைய்யா தேனிலெ மில்லுலெ போய் சேருப்பாங்கிறார்.''

''எங்க வூட்டுலையும் வேலைதான் உசத்திங்கிறாங்க நாகு.''

வெகு நேரம் வரை திரும்ப மன சில்லை. நேரம் இழுத்துக் கொண்டது. ஒடு கிற நீரில் கருக்கல் படர்ந்து விட்டது. காட்சி மங்கி மதகின் இரைச்சல் மட்டும் கூடிற்று. பேச்சின் சுகமும், இரவு நேரத் தனிமையும் சிரிப்பு தெறிற்று.

''ஏன் சிரிக்கிறே...?''

''வேற என்ன செய்ய?''

''எனக்கு வாதிச்சுக்கிட்டே இருக்கு.''

''அம்புட்டுத்தான் கோவிந்து.''

''அவ எதிர்ப்பு காட்டிருக்கணும். உன் பத்தாயிரம் எதுக்குடான்னு அவன் மூஞ்சி யிலே தூக்கி விட்டெறிஞ்சிருக்கணும்.''

''அவனா பத்தாயிரம் கேட்டா?''

''பின்னே?''

''அவளுக்கு அது பெரிசில்லை.''

''பின்ன எப்படி சமாதானம் ஆனா?''

''சமாதானம் ஆயிட்டானு யார் சொன்னா?''

''நேத்து பஞ்சுவைப் பார்த்தேன் கோவிந்து.''

"நம்ம தலைவரோட நாய்க்கு மோப்ப சக்தி அதிகம்!"

"அப்படியா...?"

"ஆமாம்... லஞ்சம் கொடுக்க வர்ற

"கல்யாணத்துலேர்ந்து... வக்கீல் சார்!"

- ஆனந்த் சீனிவாசன்

இழுத்துக்கொண்டு ஓடிற்று. தூரத்தில் விளக்குப் புள்ளிகள். இனி பாதையைத் தேடித்தான் நடக்க வேண்டும்.

தலையாரி தோப்புக்குள் இறங்கும் போது வெளிச்சம்! திடீரென்று என்ன வெளிச்சம்? குட்டை மரத்தைத் தாண்டிய தும் வெளிச்சம் கூடிற்று. தோப்புக்குள் கம்பு வித்தை நடந்து கொண்டிருந்தது. ஏழு எட்டுப் பேர் கம்பு சுழட்டிக் கொண்டிருந்த னர். இளந்தாரிகள், நடுப்பட்ட வயசு. நடுவில் மாயாண்டித் தேவர். இறுகிய உடம்பு. ஆடுகிற சதையே அவர் உடம்பில் பார்க்க முடியாது. எழும்பித் திரண்டு நிற்கும் சதைகளும், வான் நோக்கி உயர்ந்த வெள்ளை மீசையும்தான் அவரின் அடையாளங்கள்.

பசூர் பசூரென்று மூங்கில் கம்புகள் மோதுகின்ற சப்தம். விர்விர்ரென்று காற்று கிழிபடுகிற இரைச்சல். எல்லோருடைய உடம்பும் வேர்த்துக் கொட்டியது. மீசை மாயாண்டித் தேவர் கம்பை நீட்டி, உயர்த்தி, வளைத்து என்று பாய்ச்சல் காட்டிக் கொண்டிருந்தார்.

வடக்கோடியில் வாழைத் தோப்பை ஒட்டி கிங்காங்கு சைக்கிள் செயின் சுழட்டிக் கொண்டிருந்தான். அதைப் பிடிக்க ஒரு ஏழு எட்டுப் பேர். நீளமான சைக்கிள் செயின். அதற்குத் துணி உறை. தண்ணிப் பாம்பு மாதிரி ஒல்லியான உடம்பு, நீண்டும் இருந்தது. கோவிந்து சிறிது நேரம் நின்றான். வேடிக்கை பார்த்தான்.

"வாங்க... வாங்க..." என்றார் மீசை மாயாண்டித் தேவர்.

கோவிந்து கூசிக்கொண்டே சென்றான்.

வங்களைக் கண்டுபிடிச்சி வாலாட் டுமே." - திருத்துறைப்பூண்டி சேகர்

"ஒரு சுத்து சுத்துறீங்களா?"

"வேண்டாம்..."

"அவரு சுத்துவாரா?" என்று நாகுவைப் பார்த்தார். நாகு தலையசைத்தான்.

"எளந்தாரிங்க பழகிக்க வேண்டாமா?"

நாகு கம்பை வாங்கினான். உயர அளவு பார்த்தான். முனைகளைச் சோதித்தான். உடம்பை உள்ளங்கையால் உருவி விட் டான். சலாம் வரிசை எடுத்து பசூர் பசூர் என்று சத்தம் காட்டினான். இடமும் வலமு மாய்ச் சுழன்றான். ஒன்றிரண்டு புளிய விளாறுகள் உதிர்ந்தன. புழுதி கிளம்பிற்று.

"ஜோர்! ஜோர்! படுஜோர்!"

"மூச்சு வாங்குது."

"யார் சொல்லித் தந்தது?"

"நம்ம விருமாண்டி."

"ரெகுலரா கம்பு பிடிக்கணும். வுட்டாப் போச்சு."

நாகு மூச்சிரைத்தான். கோவிந்துக்கு ஆச்சரியம். எத்தனை தெளிவாக நாகு சுழற்றுகிறான் என்ற வியப்பு. தானும் பழகி யிருந்தால் எப்படி இருக்கும்? அதைச் சுழற்றி விளையாடுவதே ஓர் இன்பம். உடம்பெல்லாம் ஓர் படபடப்பு. பரவசம். இதை எல்லாம் நாம் ஏன் படிக்கவில்லை? இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று





## தூறல் கவிதை

**உயர உயரப் பறந்த பட்டம்**
**வாலறுந்து தொங்கியது**
**காற்றைச்**
**சரியாகப் படிக்காததால்**

பெ.பாண்டியன்

ஏன் தோன்றவில்லை? விருமாண்டி களத்து மேட்டில் சுற்றிப் பார்த்திருக்கிறான். மீசை மாயாண்டித் தேவர் கம்பை வாங்கிக் கோவிந்துவிடம் கொடுத்தார். ஒவ்வொரு வரிசையாக விளக்கினார். கிங்காங்கு ஒரு கணம் இவர்களைக் கவனித்தான். கோவிந்து முகத்தைப் பார்த்தான். சைக்கிள் செயினை இடுப்பில் கட்டிக் கொண்டான். துணி உறையில் பொத்தான் இருந்தது. பெல்ட் மாதிரி கட்டிக் கொண்டான்.

''அட! கோவிந்தா..?''

கோவிந்து சிரித்தான்.

''என்ன இந்தப் பக்கம்?''

''சும்மா வந்தோம்!''

''ஒடம்புக்கு நல்லது. சும்மா வாங்க.''

''ம்.''

''அமாவாசை கழிஞ்சு சின்னசாமி நாயக்கர் வர்றார். கொம்பு சுத்தச் சொல்லித் தருவார். பட்டாக்கத்தி பழகுறதுக்கும் சொல்லிருக்கு. ராயப்பன் பட்டியிலெ ஆள் இருக்காம்.''

''போருக்கா போவப் போறோம்?''

''ஊர் நெலவரம் தெரியுமா உங்களுக்கு?''

''ப்சு.''

''ஏதேதோ திட்டம் போட்டுக்கிட்டிருக்கானுவளாம். முந்தா நாள் நம்மாளுவ பிள்ளைகளைக் கேலி பண்ணிருக்கானுவ.''

''நம்ம மேலயும் தப்பு இருக்கு.''

''அதுக்காக குடியான புள்ளகிட்ட வாய் கொடுக்கலாமா?''

கிங்காங்கு ரசீது புத்தகத்தைப் பிரித்தான். 'இளைஞர் மன்றம்' என்ற ரசீது. ரோஸ் கலர் ரசீது புத்தகம். காக்கி அட்டை. படபடவென்று புரட்டிக் காட்டினான். ''நம்ம ஆளுங்க எல்லாருட்டயும் துட்டு வாங்கியாச்சு. மாசா மாசம் அஞ்சு ரூபா. நம்ம ஒத்தக்கடை மணி கூட போட்டுட்டான். ஒத்தவீட்டுக்காரன். நம்ம குடியான சாதி எல்லாம் ஒண்ணு. அதக் காட்டணும். நீங்களும் உள்ளார வரணும். படிச்ச ஆளுங்க வந்தா மதிப்புத்தானே? நம்ம ஆளுங்க வெளியூர்லெ இருந்தாலும் பிடிக்கணும். குரங்குப் பாண்டி நாடார் மவனும் கோயம்புத்தூர்லெ இருக்காப்புலெ. ஒரு கடிதம் போட்டுச்சு. இந்தா நூறு அனுப்பிப் போட்டாப்புலெ'' என்று மற்றொரு கடிதத்தைப் பிரித்தான். ''இதா இவங்க மாமா கூட பத்து கொடுத்திருக்காப்புலெ'' என்று நாகுவைக் கைகாட்டினான்.

''நான் எவ்வளவு தரணும்?''

''அது முக்கியமில்லை.''

''பின்னே?''

''உள்ளே வரணும்.''

மீசை மாயாண்டித் தேவர் சிரித்தார். கடகடவென்று கல்லுருண்டு விழுவது மாதிரி சிரிப்பு. சிரிப்பில் சிதறிய மீசையை ஒழுங்குபடுத்திக் கொண்டார்.

''ஏலெ கிங்காங்கு என்னடா பேச்சு பேசுற?''

''ஒரு பேச்சுக்குச் சொல்ல வாண்டாமா?''

''ஏலெ கோட்டி. அவுகளுக்குத் தெரியுமுடா. ஒரு ரசீது புக்கத் தூக்கிக் கொடுடா. எழுதிட்டு பிற்பாடு தருவாக...''

''நீங்க அப்படிச் சொல்றீகளா?''

''கோட்டியாவுலெடா இருக்க...''

கோவிந்து மிரண்டு போனான்!

**(காற்று வீசும்)**


என்ன சார்..! உங்க வீட்டுல பூனையை
எலி துரத்துதே! ரொம்ப ஆச்சர்யமா இருக்கே..?
இதிலே என்ன ஆச்சர்யம்!
எலியை என் மனைவி
வளர்க்கிறாள்; பூனையை
நான் வளர்க்கிறேன்!
அவ வளர்ப்பு அப்படி!
ராம் சுப்ரமணி
திருவாரூர்

இறைநம்பிக்கை பற்றி பேச்சு வந்த போது அந்த முதியவர் கை விரல்களை நீட்டி எண்ண ஆரம்பித்து விட்டார். அவர் எண்ணி முடிக்கும்வரை நார்மன் லூயிஸ் காத்திருந்தார். பிறகு கேட்டார்: ''அதென்ன கணக்கு?'' ''ஓ அதுவா, மொத்தம் எத்தனை கடவுள்கள் இருக்கிறார்கள் என்று கணக்கு போட்டுப் பார்த்தேன். இருபத்து மூன்று வந்தது. ஒப்பிக்கவா? பல்லி, ஓணான், வெட்டுக்கிளி, பாம்பு, காக்கா... இறுதியாக, மண்புழு. இருப்பதிலேயே, அதிக சக்தி வாய்ந்தது மண்புழுதான். அவருக்கு இருக்கும் புனிதத்தன்மை வேறு எந்தக் கடவுளுக்கும் இல்லை.




**இருபத்து மூன்று கடவுள்களைப் பிறங்கிக் கொண்டு ஒரே ஒரு கடவுளை மட்டும் கொடுப்பது எந்த வகையில் நியாயம்?**

இந்த உலகத்தைப் படைத்தவர் அவர்தான். நாங்கள் அவரை விசேஷமாக வணங்குவோம்.''

அந்த முதியவர் சவோரா என்னும் பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர். இவர்களைத் தேடித்தான் நார்மன் லூயிஸ் பிரிட்டனில் இருந்து இந்தியா வந்திருந்தார்.

பயணம் இவருக்குப் பொழுது போக்கு அல்ல. பெரும்பாலான பயண எழுத்தாளர்கள் படையெடுக்கும் இடங்களை இவர் சீந்துவதுகூட இல்லை.

'நான் பதிவு செய்ய விரும்புவது சாமானியர்களின் அனுபவங்களை, அவர்கள் வாழும் உலகத்தின் அதிசயங்களை, அவலங்களை. நான் அவர்களிடம் இருந்தே கற்றுக்கொள்கிறேன். அவர்களையே நேசிக்கிறேன்' என்பார் நார்மன் லூயிஸ்.

Norman Lewis Omnibus என்னும் புத்தகத்தில், அவரது மூன்று முக்கியமான பயண நூல்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. முதல் நூல், A Dragon Apparent, இந்தோ சீனா (லாவோஸ், வியட்நாம், கம்போடியா) பற்றியது. அடுத்தது, Golden Earth. மியான்மரில் லூயிஸ் சந்தித்த இடங்களையும் மனிதர்களையும் பற்றிய நூல். மூன்றாவது இந்தியப் பயணம். A Goddess in the Stones.

தாம் சந்திக்கும் ஒவ்வொருவரும் விசேஷமானவர் என்பது லூயிஸின் நம்பிக்கை. பம்பரம் விடும் குழந்தை, ஐஸ் விற்கும் தாத்தா, துணி துவைக்கும்

பெண், கழுதையை ஓட்டிச்செல்லும் இளைஞன்... என அனைவரையும் ஒரே மாதிரியான ஆச்சரியத்துடன் அணுகு கிறார் லூயிஸ்.

கம்போடியாவில் சில பௌத்தத் துறவிகளைக் காண்கிறார். சிறு சல னமும் இல்லாமல் அமைதியாக இயங் கும் அந்த மனிதர்களை அருகில் சென்று கவனிக்கிறார். கொசு தன்னைக் கடிப் பதை வேடிக்கை பார்த்துக்கொண்டி ருக்கிறார் ஒரு துறவி. பாவம், அதற்கான உணவு. எடுத்துக்கொள்ளட்டும்.

எழுத்தில் எகத்தாளமோ, நேரடிக் கிண்டலோ, தன்னை முன்னிறுத்திக் கொள்ளும் மனோபாவமோ இருக்காது. 'பார்த்ததைப் பார்த்தபடி, கேட்டதைக் கேட்டபடி, நான் பார்த்த இந்தியாவைப் பதிவு செய்திருக்கிறேன். என் வேலை முடிந்தது' என்று சொல்லும் நார்மன் லூயிஸ், கிறிஸ்தவ மிஷனரிகளின் செயல்பாடுகளை விமர்சித்திருக்கிறார்.

# மருமவும் ஒரு கடவுள்!

குறிப்பாக, லத்தீன் அமெரிக்க நாடு களில் உள்ள பழங்குடியினரை மிஷனரி கள் மதமாற்றம் செய்துவருவதையும், நாகரிகம் என்னும் பெயரில் அவர் களைப் பொது வாழ்க்கைக்கு இழுத்து வருவதையும் லூயிஸ் விரும்ப வில்லை. எது நாகரிகம் என்பதை யார் முடிவு செய்வது? உண்மையில், நாகரிகம் இன்னும் மிச்சம் இருப்பது அவர்களிடம் மட்டும்தான் என்கிறார்.

அந்த முதியவர், நார்மன் லூயிஸிடம் கேட்ட கேள்வி இது. 'இருபத்து மூன்று கடவுள்களை வைத்திருந்தோம். கிறிஸ்த வத்துக்கு மாறுங்கள் என்று சொல்லி சிலர் வந்தார்கள். எங்கள் இறைவனே இனி உங்களுக்கும் இறைவன். அவனை ஏற்றுக்கொள்ளுங்கள் என்று மன்றாடி னார்கள். நாங்களும் ஏற்றுக்கொண் டோம். ஆனால் கணக்கு தப்புகிறது. இருபத்து மூன்று கடவுள்களைப் பிடுங்கிக்கொண்டு ஒரே ஒரு கடவுளை மட்டும் கொடுப்பது எந்த வகை யில் நியாயம்?'







மருதன்

**மேஷம் :** வேலையில் இருந்து வந்த மனபயம் விலகும். பணக்கஷ்டம் இருக் காது. நீண்டநாள் தடைப்பட்டு வந்த காரி யம் பூர்த்தி ஆகும். எதிர்ப்புகள் விலகும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். குழந்தை பாக்கியம் ஏற்படும். செவ்வாய், வெள்ளிதோறும் ராகு / கேது பகவானுக்கு தீபம் ஏற்றி வரவும்.

**ரிஷபம் :** வீடு, மனை வாங்க உகந்த காலம். சுபகாரியப் பிரார்த்தனைகள் நிறை வேறும். நோய்நொடிகள் தீரும். கடல் கடந்த மனிதர்கள் மூலம் நல்ல தகவல்கள் வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். வேலையில் உயர்வு ஏற்படும். பண வரவு பெருகும்.

**மிதுனம் :** பொறுமையுடனும், நிதானத் துடனும் செயல்பட்டால் வெற்றிக் கனியை அடைய முடியும். வாகனங்களில் செல்லும் போது உஷார். யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். மேல் அதிகாரிகளிடம் ஒத்துப் போவது நல்லது. திருமண முயற்சி தடைப்படும். உடல் நிலையில் கவனம் தேவை. நவகிரஹ வழிபாடு செய்து வரவும்.

**கடகம் :** திருமணக் காரியம் நிறை வேறும். வாக்குவன்மை மேலோங்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கடன் தொல்லை தீரும். கோர்ட் வழக்கு தொல்லை தீரும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். உத்தியோகத்தில் நற் பெயர் கிட்டும்.

**சிம்மம் :** மறைமுக எதிர்ப்புகள் இருக் கும். நியாயத்தை நிலைநிறுத்தப் போராட வேண்டி இருக்கும். மனத்தில் இனம் புரியாத குழப்பம் இருக்கும். உடல்நிலை சற்று பாதிக்கும். எதிலும் அகலக் கால் வைக்க வேண்டாம். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். வழக்கு தாமதம் ஆகும். வியாழன்தோறும் குருவுக்கு அர்ச் சனை செய்து வரவும்.

**கன்னி :** நீண்ட நாள் எண்ணங்கள் ஈடேறும். வியாபாரத்தில் வெற்றிக் கொடி நாட்டுவீர்கள். வீடு / மனை வாங்க உகந்த நேரம். சத்ரு தொல்லை நீங்கும். பிள்ளை கள் பற்றின கவலை நீங்கும். பூர்வீகச் சொத்து வந்து சேரும். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். சிலருக்கு

## 01.02.09 முதல் 07.02.09 வரை



மகப்பேறு பாக்கியம் உண்டாகும்.

**துலாம் :** வீடு மாற்றம், தொழில் மாற்றம் ஏற்படும். உடல் நிலை சீராகும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். திருமணத் தடை விலகும். வழக்கு வெற்றி பெறும். மனக்குழப்பம் தீரும். வியாபாரத்தில் நல்ல வருமானம் கிட்டும். ராகு / கேது வழிபட்டு வருதல் நலம் தரும்.

**விருச்சிகம் :** உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். தந்தை வழியில் சொத்துகள் கிட்டும். சுபகாரியப் பிரார்த்தனைகள் நிறைவேறும். நோய்நொடிகள் தீரும். வேலையில் ஊதிய உயர்வு உண்டாகும். புதிய பணி தேடி வரும்.




# நடக்குமென்பார்; நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்

**தனுசு :** வாக்கு வன்மை மேலோங்கும். நாணயம் காப்பாற்றப்படும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். திருமணம் தடை விலகி கைகூடும். பிரிந்தவர்கள் ஒன்று சேர்வார்கள். வழக்கு வெற்றி அளிக்கும். கடன் சுமை தீரும். வேலைப்பளு குறையும். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். ராகு / கேதுவுக்கு தீபம் ஏற்றிவர நற்பலன் கிட்டும்.

**மகரம் :** இந்த வாரம் முன்னேற்றமான வாரம். மனத்தில் இருந்துவந்த பயம் விலகும். கொடுத்த கடன் திரும்பி வரும். கணவன் - மனைவிக்குள் இருந்து வந்த மனக்கசப்பு விலகி, குடும்பம் ஒன்றுபடும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கும்பம் :** தேவை இல்லாத செலவுகள் வரலாம். சிக்கனமும் சேமிப்பும் இருக்க வேண்டும். பத்திரிகைகளில் பெயர் வரும். வீட்டில் சுபச் செலவு ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கடன் சுமை தீரும். வெளியூர் நண்பர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். திருமண முயற்சி பலன் அளிக்கும்.

**மீனம் :** தொழில் துறையில் வருவாய் பெருகும். புதிய பணி தேடி வரும். திருமணம் கைகூடும். குழந்தைகள் மூலம் மனசந்தோஷம் கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். கல்வி வளம் மேலோங்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ராகு / கேது வழிபாடு செய்துவர நற்பலன் கைகூடும்.

அமெரிக்க அதிபராகப் பதவியேற்ற கையோடு இந்தியாவுக்கு... குறிப்பாக சென்னைக்கு வந்த ஒபாமா, பாதுகாப்பு காரணமாக ஹோட்டலில் தங்காமல், ஒரு வி.ஐ.பி. நண்பர் வீட்டில் தங்குகிறார். அவர் வந்த நேரம் அந்தத் தொகுதியில் இடைத்தேர்தல்! அப்புறமென்ன... ஒபாமா தங்கியிருந்த 24 மணி நேர லைவ் டெலிகாஸ்ட் இதோ...

**காலை 5 மணி**

பாத்ரூமிலிருந்து முகத்தைத் துடைத்த வாறு ஹாலுக்கு வந்த ஒபாமா, சோபாவில் அமர்ந்தார். மடிப்பு கலையாத செய்தித் தாளை எடுத்துப் பிரிக்க... உள்ளே இருந்து 'பொலபொல'வென கொட்டின இரண்டு ஐந்நூறு ரூபாய்த் தாள்கள். மனிதர் அரண்டு போனார்.

''வெங்கட்! வெங்கட்'' என்று அலறினார்.

படுக்கையறையில் இருந்து நண்பர் அடித்துப் பிடித்து ஓடிவந்து, ''என்ன ஆச்சு?'' என்று கேட்டார்.

''இதென்ன... நியூஸ் பேப்பர்ல இருந்து உங்க நாட்டு கரன்ஸி விழுது. பாவம்... பேப்பர் பையன் தவறி விட்டிருக்கணும்'' என்றார்.

''சே! சே! எங்க ஊர் பேப்பர் பையன் ஐந்நூறு ரூபாய் நோட்டையே பார்த்திருக்க மாட்டான்.''

''அப்புறம் எப்படி?''

''வழக்கமா கம்ப்யூட்டர் கோர்ஸ், கடைத் திறப்பு நோட்டீஸ் தான் விழும். இப்ப இடைத் தேர்தல் நடக்குதில்லியா அதான் கரன்ஸி விழுது'' என்று சர்வசாதாரண மாகச் சொன்னார் வெங்கட்.

அப்போது சமையலறையிலிருந்து வந்த மிஸஸ் மிச்சேல் ஒபாமா, ''அதிசயம்! ஆச்சர்யம்! மிஸ்டர் வெங்கட். உங்க மிஸஸ் பால் காய்ச்சறதுக்காக பால் பாக்கெட்டை 'கட்' பண்ணி பாத்திரத்துல ஊத்தினாங்க. அதுல

# ஒபாமாவுக்கு



## கிண்டல் காலனி

ஒரு மோதிரம் இருந்தது'' என்றார்.

''நேத்து மூக்குத்தி இன்னிக்கு மோதிரமா? வெரிகுட்! படிப்படியா பெருசாயிட்டே போகுது. நாளைக்கு நெற்றிபில்லை இருக்கும்னு நினைக்கிறேன்'' என்று உற்சாகமானார் வெங்கட்.

''வெங்கட்! இதையெல்லாம் யார் கொடுக்கறது?'' - இது ஒபாமா.

''வேற யாரு தேர்தல்ல நிற்கிற கட்சிகள் தான். இது ஆரம்பம். போகப் போக களைகட்டும்'' என்றார் வெங்கட்.

**காலை 9 மணி**

''போடுங்கம்மா வோட்டு... குத்து விளக்கைப் பார்த்து'' என்றபடி ஒரு கோஷ்டி, வெங்கட் வீட்டை முற்றுகையிட்டது. வேட்பாளர் கைகூப்பியவாறு டைனிங் டேபிளுக்கு வந்தார்.

''என்ன இட்லியா? வெரிகுட். டேய் பசங்களா! ஆளுக்கொரு விளக்கைக் கொடுங்கடா'' என்று கட்டளையிட, தொண்டர்கள் குத்துவிளக்குகளை எல்லோர் கைகளிலும் திணித்தார்கள்.

'ஏய்! ஏய்! என்ன இது?''

''தரமான பித்தளைக் குத்து விளக்கு. வெள்ளிக்கிழமை அதுவுமா

# வோட்டுரிமை!



கொடுத்திருக்கோம். சாப்பிடற இட்லி மேல சத்தியமா எனக்குத்தான் வோட்டு போடு வேன்னு சொல்லுங்க.''

''மிஸ்டர் எனக்கு எதுக்குக் கொடுத்தீங்க? நான் விருந்தாளி'' என்றார் ஒபாமா.

''பரவாயில்லைங்க. இன்னிக்கே உங்க பேரை வோட்டு லிஸ்ட்ல சேர்க்க ஏற்பாடு பண்றேன். போட்டுட்டு ஊருக்குப் போங்க. அப்போ நாங்க கிளம்பறோம். குத்து விளக்கை மறக்காதீங்க'' என்றபடி புயலாய் வெளியேறியது கோஷ்டி.

### பகல் 2 மணி

ஒரு நிகழ்ச்சிக்குப் போய்விட்டுத் திரும்பிய ஒபாமாவின் கார் தெரு




முனையில் நின்றுவிட்டது. காரணம், தெருவை அடைத்து பந்தல் போடப் பட்டிருந்தது.

''என்ன ஆச்சு?'' என்றபடி ஒபாமா தலையை வெளியே நீட்டினார். 'கப்' என இரண்டு பேர் ஜன்னல் வழியாகவே ஒபாமாவை வெளியே இழுத்தார்கள்.

''ஹெல்ப்! ஹெல்ப்! டெரரிஸ்ட்! டெரரிஸ்ட்!''

''ஐய... அண்ணாத்தே பயப்படாதே. நாங்க அ.ஆ.இ.ஈ... கட்சி ஆளுங்க. பிரியாணி விருந்து நடக்குது. வந்து வயிறார துன்னுட்டுப் போங்க'' என்றான் ஒருவன்.

''நோ தேங்க்ஸ்'' என்று மறுத்தவரை அலேக்காகத் தூக்கிச் சென்று இலையின் முன் உட்கார வைத்தார்கள்.

''கூச்சப்படாம துன்னு அண்ணாத்தே. போறப்ப மறக்காம இலையை மடிச்சுட்டுப் போ'' என்று கூறி கண்ணடித்து நகர்ந்தான் ஒருவன்.

ஒபாமா தலையைத் திருப்பினார். பக்கத்தில் சாப்பிட்டு முடித்த ஒரு பாட்டி இலையை மடிக்க அங்கே ஆயிரம் ரூபாய் நோட்டு. ''இன்னாங்கடா ஒத்த நோட்டுதான் இருக்கு. உ.ஊ.எ.ஏ. கட்சிக்காரங்க ரெண்டு தந்தாங்களே'' என்று சீறினாள்.

''கெழவி... அது ஐந்நூறு ரூபா நோட்டுங்க. இது ஆயிரம் ரூபா. கணக்கு போட்டுப் பாரு. சரியா இருக்கும்.''

''அதெல்லாம் கெடையாது. நான் உங்களுக்குப் போட மாட்டேன்'' என்றபடி சென்றுவிட்டாள்.

### இரவு 9 மணி

''வெங்கட்! எங்க நாட்டுப் பொருளாதாரத்தைச் சரிசெய்ய வழி கண்டுபிடிச்சுட்டேன். இன்னும் ஒரு வாரம் உன் வீட்டுலேயே தங்கப் போறேன். அப்போ கிடைக்கிற பணம், பொருளை எடுத்துட்டுப் போனா என் நாட்டைக் காப்பாத்திட முடியாது?'' என்று கேட்டார் ஒபாமா.

''சந்தேகமே வேணாம். அதுக்கு மேலேயே கலெக்ட் பண்ணிடலாம்'' வெங்கட் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வெளியே ஒரு கட்சியின் கோஷம் கேட்டது.

ஒபாமா மனைவி, குழந்தைகளோடு ஆவலுடன் வாசலுக்கு ஓடினார். ●

# பெட்ரோல் யுத்தம்!

**பெட்ரோலின் கதை - ஜி.எஸ்.எஸ்., விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 32. விலை ரூ. 45.00**

தன்னைத் தனக்குள் உருவாக்கி, தனக்குள் அழிக்கும் அபூர்வ ஆற்றல் கொண்டது இயற்கை. அதன் உபகரணங்களுள் ஒன்று பெட்ரோல். நெருப்பின் திரவ வடிவம். காற்றின் கரைசல். நீரின் ஒழுகல். இன்று பாலைவனமாய் இருக்கும் நிலமெல்லாம் முன்பு எப்பொழுதோ கடலாய் இருந்ததற்கான ஆதாரம். அழிந்து போன உயிரினங்களின் மீட்சி பெட்ரோல். இப்படிப் பல செய்திகளை ஆங்காங்கே துணுக்குகளாய் காட்டிச் செல்கிறது இந்தப் புத்தகம். முழுவதும் படித்து முடித்தால் வரலாற்றில் இடம்பெற்ற முக்கியமான யுத்தங்களின் சுருக்கமான பதிப்போ என்று எண்ணும் அளவுக்கு பெட்ரோல் போலவே ஆசிரியரின் பேனா மையும் பல புதிய தகவல்களை ஊடுருவிச் செல்கிறது.










**எண்ணங்களின் சங்கமம், தொகுத்தவர்கள் : ஜெ. பிரபாகர், எம்.ஆர். இராஜேந்திரன், குருவிராஜன் சேவா நிலையப் பதிப்பகம், 10, 5வது குறுக்குத் தெரு, ட்ரஸ்ட்புரம், சென்னை - 24. விலை ரூ. 50.00**

தமிழ்நாட்டில் சப்தத்தோடும், மௌனத்தோடும் இயங்கிக் கொண்டிருக்கும் தொண்டு அமைப்புகளின் செயல்பாடுகளை எல்லாம் பட்டியலிட்டு படிப்பவரைப் பரவசப்படுத்தும் ஓர் அற்புத வேலையை தொகுப்பாசிரியர்கள் மூவரும் செய்துள்ளனர். தொண்டுள்ளம் படைத்த வாசகர்கள் தொடர்பு கொள்வதற்காக வேண்டி, ஒவ்வொரு தொண்டு அமைப்பினையும் அதன் முழு முகவரியோடு தந்திருப்பது ஆசிரியர்களின் சமூக அக்கறையை வெளிப்படுத்துகிறது.

**நெப்போலியன் - மெர்வின், சுவாமிமலை பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ. 50.00**

இதுவரை பல வாழ்வியல் சார்ந்த புத்தகங்களை எழுதியுள்ள ஆசிரியர் மெர்வினுக்கு இந்தப் புத்தகம் நிச்சயம் ஒரு மைல் கல்லாக அமையும் என்பதில் சந்தேகமில்லை. வரலாற்று மாணவர்கள் படித்துப் பயன்பெறுவதற்கு ஏதுவாக எளிய நடையில் மாவீரன் நெப்போலியனின் வாழ்க்கை வரலாற்றைப் பகுதி பகுதியாகத் தந்துள்ளார் ஆசிரியர்.

– சகா

# நான் பேச வேண்டியதில்லை!



✱ அனிதா

**த**மிழ் நவீன ஓவியர்களுள் மிக முக்கியமானவர் C.J. அந்தோணிதாஸ். எட்டு வயதில் வரையத் துவங்கி, ஓவியராக உருப்பெற்று, எழும்பூரிலுள்ள அரசு கவின்கலை கல்லூரியில் முறையாகப் பயின்று, அங்கேயே ஓவிய ஆசிரியராகவும், பின்னர் அக்கல்லூரியின் முதல்வராகவும் பணிபுரிந்தவர். ஆதிமூலம், சந்ரு, தோட்டாதரணி, ஆர்.பி.பாஸ்கரன், நடிகர் சிவகுமார் இந்த வி.ஐ.பி.களுக்கு இவர்தான் குரு. காலமாகிப்போன தமது தந்தையின் படைப்புகளையும் நினைவுகளையும் காலப் பெட்டகமாக மாற்ற நினைத்தார் அவருடைய மகள் ஓவியர் அனிதா. சமீபத்தில் 'தி கேலரி ஆஃப் C.J. அந்தோணிதாஸ்' என்ற நூலை எழுதி, கவர்னரை அழைத்து வெளியிட்டார். அப்பா வரைந்த ஓவியங்களையும் கண்காட்சிக்கு வைத்திருந்தார். ''என் ஓவியம் தான் பேச வேண்டும். பேட்டிகளில் நான் பேச வேண்டியதில்லை என்று சொன்ன என் அப்பாவை, அடுத்த தலைமுறைக்குக் கடத்துவதுதானே ஒரு மகளின் கடமையாகும்!'' என்று கேள்வியை விதையெனத் தூவிவிட்டுப் போகிறார் அனிதா.

- அமிர்தா

# வாழ்வைப் பின்னும் கீற்று!

மகாபலிபுரம் ஈ.சி.ஆர். சாலையில், தென்னங்கீற்றால் ஆன கூரைகளோடு சிரிக்கின்றன காட்டேஜ்கள். சில நட்சத்திர ஓட்டல்களில் ரூஃப் கார்டன் பகுதிகளில் கூரைகளை வேய்கிறார்கள். 'என்ன ஆயிற்று? மீண்டும் நம்முடைய பழைமைக்கு வர வேற்பு ஏற்பட்டிருக்கிறதா?' என்றால், ''அதுதாங்க இல்லை. இந்தத் தொழிலை விட மனசில்லாமத்தான் செய்துக்கிட்டு இருக்கோம்'' என்கிறார் சேலம் ஆத்தூர் அருகிலுள்ள உடையாம்பட்டியைச் சேர்ந்த விஜயா. குடிசைத் தொழில் போல, இந்தக் கிராமமே கீற்று முடையும் வேலையில் ஈடுபட்டிருக் கிறது என்பதுதான் இதில் சிறப்பம்சம்!

ஒருகாலத்தில் அதிகளவில் பெண்கள் ஈடுபட்டிருந்த கூலித் தொழில். கூலி கட்டுப்படியாகவில்லை. பலரும் வேறு வேலைகளுக்குப் போய் விட்டனர். அதனால் இன்று சுயமான குடிசைத் தொழிலாக மாறிப் போயுள்ளது. ''ஒருநாளைக்கு ஒரு பொம்பளையாளு சுறுசுறுப்பாப் பின்னுனாக்கூட, நூத்தைம் பது கீத்துக்கு மேல பின்ன முடியாது. மிஞ்சி மிஞ்சிப் போனா நாப்பத்தைஞ்சு ரூபாய் தான் கூலி கெடைக்கும். இதே கட்டட வேலைக்கோ, காடு கரை வேலைக்கோ போனா இதவிட ரெண்டு மடங்கு கூலி கெடைக்குது. அதனால்தான் இதுக்குக் கூலி ஆளுங்க இல்லாமப் போய்டுச்சு. நாங்க இப்ப சொந்தமா கீத்து பின்னுறோம்'' எனக் கூறுகிறார் விஜயா.

தர்மராஜ் - விஜயா தம்பதியினர்க்கு இது முப்பது வருடத் தொழில். ''தென்னந் தோப்பு வருஷாந்திர குத்தகைக்குப் பேசிடு வோம். அதுல

**இந்தப் பழைமையான தொழிலை விடறதுக்கு மனசில்லாமத் தான் செய்துக்கிட்டு இருக்கோம்!**



✱ தர்மராஜ்

✱ விஜயா

சமைச்சுட்டு... மத்த நேரம் கீத்து பின்றதுக்குனு ஒக்காந்திடுவேன்!'' என்கிறார் விஜயா.

பழுத்துத் தானா விழுற தென்னை மட்டைகளை மட்டும் எங்களுக்குத் தந்திடுவாங்க. இதுலயும் ஒரு கணக்கு இருக்கு. ஒரு மரத்துலேர்ந்து ஒரு வருஷத்துக்கு பன்னெண்டு மட்டைதான் காய்ஞ்சு கீழே விழும். இப்ப நானு ஆயிரம் தென்னை மரம் உள்ள தோப்பைக் குத்தகைக்கு எடுத்திருக்கேன்.

மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்கள்ல காய்ஞ்ச மட்டை அதிகமாக் கெடைக்கும். மத்த எட்டு மாதங்கள்ல ஒண்ணு ரெண்டா விழுந்துகிட்டே இருக்கும். எல்லாத்தையும் எடுத்து வெச்சுகிட்டு, அப்பப்ப தண்ணியில ஊறப்போட்டு வைப்போம். அப்பத்தான் கீத்துமுடைய வளைஞ்சு கொடுக்கும். வூட்டுக்கு எதுத்தாப்லயே பின்னுறோம். வேளாவேளைக்கு

''நாங்க பின்னுற கீத்துக்கு வெளியூர்கள்ல நல்ல கிராக்கி. வெளியூர் வியாபாரிங்க இங்கன வந்து வாங்கிட்டுப் போவாங்க. விருத்தாசலம், கடலூர், கள்ளக்குறிச்சி, தொழுதூர், சிதம்பரம், உளுந்தூர்பேட்டை, தியாகதுருகம் போன்ற இடங்களுக்கு நாங்க பின்னுற தென்னங்கீத்து போய்ச் சேருது. மழை நாள்ல மட்டும் கீத்து பின்ன முடியாது. கீத்து வேய்ஞ்ச ஓலைக் குடிசைக்குள்ளார மழைத் தண்ணி ஒழுகாது. ஆனா, நாங்க பின்னுற கீத்துகளை மழைத் தண்ணியில நனைய வுட்டா, கறுப்பாயிடும். அப்புறம் மக்கிப் போயிரும். மழை கொட்டுதுனு தெரிஞ்சா, பின்னி முடிஞ்ச கீத்துக்களை கட்டுக்கட்டா அட்டி போட்டு அடுக்கி பிளாஸ்டிக் தார்ப்பாய்களைப் போட்டு மூடி வெச்சிடுவோம்'' என்கிறார் தர்மராஜ்.

**– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# அம்மாவோடு அரைநாள்

''வாழ்க்கையில் ஒருவருக்குத் துன்பம் ஏற்படும்பொழுதெல்லாம் அவை எல்லாவற்றையும் இறைவன் தனக்கு அளித்த தண்டனையாகப் பார்க்காமல், தம்மைத் தாமே உணர்ந்துகொள்ள இறைவன் அளிக்கும் ஒரு வாய்ப்பு என்று எடுத்துக்கொள்ள வேண்டும். வாழ்க்கை என்பதே ஒரு சக்கரம் மாதிரிதான். ஒரு வாக்கியம் என்பதற்குக் கூட எப்படி ஒரு முற்றுப்புள்ளி வைப்பது அடுத்த வாக்கியம் தொடரவோ அப்படித்தான் வாழ்க்கையும். துன்பமான சூழ்நிலையின்போது துவண்டு விடாமல், இறைவன் மீது பக்தி செலுத்தி, மனத்தைக் கட்டுப்படுத்த ஒவ்வொருவரும் பயிற்சி மேற்கொள்ள வேண்டும். ஒரு மாபெரும் போர்க்களத்தில்தான் அர்ஜுனனுக்கே கீதை எனும் நல் உபதேசம் கிடைத்தது'' என்று சொல்லச் சொல்ல, கூடியிருந்த பக்தர்கள் கண்களில் பரவசமும் கண்ணீரும் தளும்பியதைக் காண முடிந்தது.

சென்னை விருகம்பாகத்தில் உள்ள மாதா அமிர்தானந்தமயி மடம் அன்னையின் இரண்டு நாள் வருகையையொட்டி திருவிழாக்கோலம் பூண்டிருந்தது. வெள்ளை உடைகளில் பவனி வந்த பக்தர்கள் வெள்ளம் ஒருபுறம். அம்மாவை ஒரு முறையேனும் தரிசித்துவிட மாட்டோமா என பல மைல்கள் தாண்டி வந்து ஏக்கத்தோடு காத்துக் கொண்டிருந்த மக்கள் பெருங்கூட்டம் மறுபுறம், இதற்கிடையில் சுப்ரமணிய சுவாமி, சந்திரலேகா என வி.ஐ.பி.க்கள் விஸிட்!



ஜெர்மனியிலிருந்தும், பிரான்ஸிலிருந்தும், தென்னகம் முழுவதும் ஆன்மீக சுற்றுப்பயணத்தை அம்மாவுடன் மேற்கொள்வதற்காக பறந்து வந்துள்ள வெளிநாட்டினர் மட்டுமே சுமார் ஐந்நூறு பேர். ''அன்னையைப் பற்றி நான் முதன்முதலாக என் நண்பர் ஒருவர் மூலமாக ஐந்து வருடங்களுக்கு முன் கேள்விப்பட்டேன். ஒரு முறை அன்னையை ஐரோப்பிய நாடு ஒன்றில் சந்தித்தேன். ஓர் எல்லை இல்லாத ஆனந்தத்தையும், அமைதியையும் அன்னையைப் பார்த்த மறு நிமிடமே நான் உணர்ந்தேன். இனி அன்னைதான் எனக்கு வழிகாட்டி என்பதை அன்றே உணர்ந்து கொண்டேன்'' என மெய்சிலிர்த்துப்

**"ஒரு மிருகத்தை அடித்துத் தின்னும் கொடூரத்தை நான் விட்டு விட்டேன்"**

பேசுகிறார் ஜெர்மனியிலிருந்து வந்திருக்கும் ஹரால்ட்.

''அன்னையை நான் எப்பொழுதாவதுதான் நேரில் கண்டு தரிசிக்கும் பாக்கியம் கிடைக்கிறது. வாரா வாரம் 20 ஜெர்மானியர்கள் ஒன்று கூடி அன்னையைப் பற்றிய பஜனைப் பாடல்களைப் பாடுவோம். மாதா மாதம் நாற்பது ஜெர்மானி



# தொடர வைக்கும் முற்றுப்புள்ளி!

யர்கள் ஒரு பெரிய யோகா மையத்தில் ஒன்று கூடி சத்சங்கம் நடத்துவோம். அன்னை ஒரு முறை, நமக்கென சத்சங்கம் நடத்த சொந்தமாக ஒரு சிறிய அறையை வாங்க முயற்சியுங்களேன் எனக் கூறினார். அன்னையின் ஆணைப்படி அதையும் வெகு சீக்கிரத்தில் நிறைவேற்ற முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிறோம். அன்னை இதோ இந்த சத்சங்க சொற்பொழிவில் பேசும் மொழிதான் எங்களுக்குப் புரியவில்லை. ஆனால், அன்னையின் குரலைக் கேட்கவே ஆனந்தமாக இருக்கிறது. இந்தச் சொற்பொழிவை ஆங்கிலத்திலும் யாராவது மொழிபெயர்த்துக் கூறினால் அது நிச்சயம் பேரானந்தமாக இருக்கும்'' என்கிறார் மார்கோ என்ற ஜெர்மானியர்.



* மார்கோ



* ஹரால்ட்

பிரான்ஸிலிருந்து தன்னந்தனியாக அன்னையைக் காண்பதற்காக வந்திருக்கும் நிருபமா, ''அன்னையைப் பதினெட்டு வருடங்களுக்கு முன் பிரான்ஸில் சந்தித்தேன். எனது அம்மா அவர்தான். அவரை தரிசனம் செய்த பின் 'ஒரு மிருகத்தை அடித்துத் தின்பது எவ்வளவு பெரிய கொடூரம். அதுவும் ஒரு உயிர்தானே' என அன்னை ஒரு முறை கூறினார். அதைக் கேட்டதிலிருந்தே நான் சுத்த சைவமாக மாறி விட்டேன்'' என்கிறார்.

இந்த ஆன்மீகத் திருவிழாவில் கலந்து கொண்ட பக்தர்களின் எண்ணிக்கை சுமார் இரண்டு லட்சம்!

**- நளினி சம்பத்குமார்**

# கேம்பஸ் கதை - 2



எங்கள் காலேஜ் கேம்பஸ் அன்று வழக்கத்தை விடவும் கலகலப்பாக இருந்தது. மாணவிகளின் தாண்டியா ஆட்டம் ஒருபுறம். மற்றொருபுறம் பி.ஏ. மூன்றாமாண்டு மாணவர்கள் ஜிம்னாஸ்டிக் வளையத்துக்குள் 'டைவ்' அடிப்பதும், சிலம்பம் சுழற்றுவதுமாக இருந்தனர். அந்தப் பக்கம் அணிவகுப்பு இசையாக ட்ரம்ஸ்களின் 'தம்... தம் தண்டர... தண்டர' அதிரவைத்துக் கொண்டிருந்தது. எல்லாம் அடுத்த வாரம் நடைபெறவிருக்கும் கல்லூரி ஆண்டு விழாவுக்கான ஒத்திகை நிகழ்ச்சி தான்.

விசாலமான கேம்பஸ் புல்வெளியிலுள்ள மர நிழலில் தனுஷ் என்கிற நான் மற்றும் கல்யாண், விசு, தாமு ஆகியோர் நடப்பவற்றை வேடிக்கை பார்த்தபடி இருந்தாலும்... விஷுவல் கம்யூனிகேஷன்ஸ் முதலாமாண்டு மாணவர்கள் ப்ரோக்ராம் பண்ணியே ஆகவேண்டும் என்று எங்கள் ஹெச்.ஓ.டி. சேகர் சார் உத்தரவே போட்டுவிட்டதால்... என்ன செய்வது என குந்தி, குப்புறப்படுத்து, மல்லாந்து யோசித்தும் ஒன்றும் பிடிபடவில்லை.

''நம்ம தாமு மிமிக்ரி பண்ணுவான்டா. அவனை இறக்கி

# ஜொள ஜொளும் வயசு!

விடலாமா?'' என்ற விகவை, முறைத்தான் தாமு.

''அது ஒண்ணுதான்டா குறைச்சல். இதெல்லாம் ஒரு காலேஜ். இதுக்கு ஒரு ஆண்டு விழா, அதுல நாம கலந்துக்கணும். போங்கடா போயி வேற வேலையைப் பாருங்க'' என்று எழுந்த கல்யாணைப் பிடித்து அமரவைத்தேன்.

அவன் கோபப்படுவதிலும் நியாயம் இருக்கு. பின்ன என்னங்க காலை பத்து மணிக்குள்ள கேம்பஸுக்குள்ள இருக்கணும், லேட்டா வந்தா 50, 100ன்னு ஃபைன். சனிக்கிழமையும் காலேஜ். வகுப்பு நேரத்தில் கேம்பஸுக்குள் சுற்றக் கூடாது. மற்ற காலேஜ் மாணவர்கள் போல கலரிங் செய்வது, கடுக்கன் மாட்டுவது, 'கட்'டடிப்பது, 'பிட்'டடிப்பது எதுவும் கூடாது. அப்படி மீறினால் தனித்தனி பனிஷ்மெண்ட் காத்திருக்கும்.

இது எல்லாத்தையும் விட கேம்பஸுக்குள் மாணவ-மாணவிகள் சந்திப்பதோ, சந்தேகம் கேட்பதோ கூடவே கூடாது. இதெல்லாம் எவ்வளவு பெரிய கொடுமை. கோஎஜுகேஷன் என்றதும் நாக்கை நாலு முழம் தொங்க வைத்துக்கொண்டு வந்தது எவ்வளவு பெரிய தப்பு என்று வந்த ஒரு வாரத்தில் புரிந்தது. நல்ல ஃபிகர்களைத் தேடித் தேடிக் காதலிக்கலாம் என்ற எங்கள் கனவில் கல், மண், சிமெண்ட், ஜல்லி விழுந்தது. அதே போல படிப்பிலும் பிழிந்தெடுக்கிற நிலைதான். ஒவ்வொரு செமஸ்டரிலும் பாஸ் பண்ணியே ஆக வேண்டும். ஃபெயில் ஆனால் ஃபோட்டோவுடன் மார்க்கையும் எழுதி நோட்டீஸ் போர்டில் ஒட்டி விடுவார்கள். மாணவிகள் அதைப் பார்த்து முணுமுணுத்தபடி சிரிக்கையில், வாழை மரத்தில் தூக்கு மாட்டிக் கொண்டு தொங்கலாம் போல இருக்கும்.

கேட்கிற உங்களுக்கே கண்ணில் 'ஏ', 'பி', மற்றும் 'ஓ' பாஸிடிவ் வழிகிறதென்றால் எங்களுக்கு எப்படி இருக்கும்?

அப்போதுதான் சட்டென்று அந்த ஐடியா பல்ப் எரிந்தது. என் முகம் பிரகாசமாவதைக் கண்டு தாமு சற்றுத் தள்ளி உட்கார்ந்தான்.

''என்னடா ஆச்சு? திடீர்னு சிரிக்கிறே...'' என்ற கல்யாண் மற்றும் இருவரையும் ரகசியம் சொல்வது போல் அருகில் அழைத்தேன்.

''விழாவுக்கு சிறப்பு விருந்தினரா கலெக்டர்தானே வர்றார்?''

''ஆமா அதுக்கென்ன இப்போ..?'' விக.

''பாரதியார் பற்றி கவிதை பாடப் போறேன்னு சொல்லிட்டு மேடை ஏறி, காலேஜ்ல இருக்கிற கண்டிஷன் கொடுமைகள் எல்லாம் சொல்லப் போறேன். கலெக்டர் கேட்டாருன்னா கண்டிப்பா ஆக்ஷன் எடுப்பார்.''

''அச்சச்சோ வேணாண்டா. எதாச்சும் விபரீதமாயிடப் போகுது'' என்ற தாமுவை அலட்சியப்படுத்தினேன்.

''போடா... தூங்கினவனுக்கு தூக்கணாங் குருவிக்கூடும் பஞ்சு மெத்தை'' என்று வீரமாய் வசனம் பேசினாலும் உள்ளுக்குள் 3.2 ரிக்டர் அளவு நடுக்கம்தான்.

■ **எம்.ஜி.கன்னியப்பன்**




அடுத்த வாரம். கல்லூரி மின்விளக்குகளாலும், தோரணங்களாலும் ஜொலித்தது. கேம்பஸைச் சுற்றிலும் வண்ண வண்ணக் கொடிகள் நடப்பட்டிருந்தன. பார்க்கவே மிகவும் அழகாக இருந்தது. மைதானத்தின் ஒரு மூலையில் மேடை அமைத்திருந்தார்கள். ஒவ்வொரு பிரிவு மாணவ - மாணவிகளும் விதவிதமான நிகழ்ச்சிகளால் கலக்கிக் கொண்டிருந்தனர்.

அந்தக் கலைநிகழ்ச்சிக்கு இடையிடையே தனித் திறமையாளர்கள் மேடை ஏற்றப்பட்டுக் கொண்டிருந்தனர்.

பிரின்ஸிபால் மேடை ஏறி ''அடுத்ததாக... முதலாமாண்டு மாணவர் தனுஷ், பாரதியார் பற்றிக் கவிதை பாடுவார்...'' என்று விட்டு, ''அதற்கு முன்னால், நமது கலெக்டர் அவர்கள் வேறொரு அரசு விழாவுக்குச் செல்வதால் இரண்டொரு வார்த்தை பேசியதற்குப் பின்னர் நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெறும்'' என்றார்.

அப்போதே எனக்குச் சப்பென்று ஆகிவிட்டது. ஆனாலும் மற்ற வி.ஐ.பி.களுக்குச் சொல்வோம் என்று காத்திருந்தேன்.

மேடை ஏறிய கலெக்டர், ''இந்தக் கல்லூரியில படிக்கிற ஒவ்வொரு மாணவர்களும் கொடுத்து வைத்தவர்கள். நான் இன்றைக்கு உங்கள் முன்னாடி கலெக்டரா நிற்பதற்குக் காரணம் இந்தக் கல்லூரி எனக்குக் கத்துக் கொடுத்த ஒழுக்கம்தான். நம்ம கல்லூரி முதல்வர் சொன்னது போல என்னால் இந்தக் கல்லூரிக்கும், இந்தக் கல்லூரியால் எனக்கும் பெருமைதான். நானும் இங்கே சேர்ந்த புதிதில் வெறுப்பாகத்தான் இருந்தேன். கண்டிஷன்கள் கடுமையானதாக இருப்பதாகப் புலம்பினேன். ஆனால் இது எவ்வளவு பெரிய தன்னம்பிக்கையையும், ஒழுக்கத்தையும் கற்றுத் தரும் என்பதைப் பின்னால் புரிந்து கொண்டேன்.

அந்த எல்லா கண்டிப்புகளும், நாம் படிப்பை முடித்து வெளியேறிய பின்னாலும் நம்மை நெறிப்படுத்திக் கொண்டிருக்கும். நான் மட்டுமல்ல, இந்தப் புனிதமான கல்லூரியில் படித்த அநேகம் பேர், இன்று நல்ல கௌரவமான பதவிகளில் இருக்கிறார்கள். மற்ற கல்லூரிகள் கல்வியை மட்டும் போதிக்கும். நம் கல்லூரிதான் வாழ்க்கையையும் போதிக்கும். அதனால் மாணவர்களே... கடுமையான தண்டனைகளுக்காகவோ... பாடத் திட்டங்களுக்காகவோ வருத்தப்படாதீர்கள். இதன் பயன் பின்னால் தெரியவரும்'' என்று பலத்த கரகோஷங்களுக்கிடையே பேச்சை முடித்தார்.

நான் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, 'ச்சே... எவ்வளவு பெரிய தவறு செய்ய இருந்தேன்' என்று என்னை நானே நொந்து கொண்டேன். அதற்கு மேல் அந்த கேம்பஸுக்குள் நிற்பதற்கே தகுதியில்லாதவனாக உணர்ந்து கேட்டை விட்டு வெளியே நடந்தேன்.

மேடையில் அடுத்த நிகழ்ச்சியாக 'ஒளி படைத்த கண்ணினாய் வா... வா' என்ற பாடலுக்கு மாணவர்கள் ஆடிக்கொண்டிருந்தனர். ●



காதைக் கொடுங்க...

# அக்னி பரீட்சை!

தி.மு.க., அ.தி.மு.க. ஆகிய இரண்டும் சரியாக ஒத்து வராத நிலையில் பா.ம.க.வும் விடுதலைச் சிறுத்தைகளும் தாங்களே தனிக் கூட்டணி அமைத்தால் என்ன என்ற யோசனையைப் பரிசீலித்து வருகின்றனவாம். அதேசமயம், 'விஷப் பரீட்சை வேண்டாம்' என்ற குரல்களும் இந்தக் கட்சிகளுக்குள் கேட்கின்றன. முடிந்தால் ம.தி.மு.க.வையும் இழுத்துப் போட்டுக் கொண்டு ஈழ ஆதரவுக் கூட்டணியாக உருவாக்கலாமே என்றும் சிந்தனை ஓட்டம் இருக்கிறது. இப்படி ஒரு கூட்டணி அமைந்தால் நாற்பது பாராளுமன்றத் தொகுதிகளிலும் போட்டியிடாமல், மத்திய தமிழகம், தென் தமிழகம் பகுதியில் இருபது தொகுதிகளில் மட்டும் போட்டியிட்டு கவனம் செலுத்தலாம் என்றும் சிறுத்தைப் பிரமுகர்கள் கூறுகிறார்கள்.

தமிழகத்தில் தேசிய வங்கிகளில் கோடிக் கணக்கில் கடன் வாங்கி திருப்பிக் கட்ட முடியாமல் இருக்கும் தொழிலதிபர்களுக்கு 'நல்ல' வழிகாட்டியாகச் செயல்படுகிறார் அந்த இளைய காங்கிரஸ் பிரமுகர். பத்து கோடி கடன் என்றால், வங்கியோடு 'செட்டில்மெண்ட்' பேசி, மூன்றோ, நான்கோ வங்கியிடம் செலுத்திவிட்டு, கொஞ்சம் பிரமுகரையும் கவனித்து விட்டால் கடனிலிருந்து விடுபட்டு விடலாமாம்!

தே.மு.தி.க.வும் காங்கிரஸும் தனிக் கூட்டணி அமைக்க வாய்ப்பிருப்பதாக, தொடர்ந்து செய்திகள் வந்தாலும், இதில் ஒரு சங்கடம் இருப்பதாக தே.மு.தி.க. பிரமுகர்கள் கூறுகிறார்கள். ''எங்களோடு நீங்கள் கூட்டணியில் இருங்கள்; ஆனால், தி.மு.க.வுக்கும் உங்களுக்கும் தொடர்பிருக்காது. நீங்கள் போட்டியிடும் தொகுதிகளில் தி.மு.க. போட்டியிடாது; பிரசாரமும் செய்யாது. ஆனால், ஆதரவு வோட்டுகள் உங்களுக்கே விழும்'' என்று சொல்லுகிறதாம் காங்கிரஸ். ஆனால், இதுபோல ஒரு ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்ள விஜயகாந்த் தயங்குகிறார். காரணம், தி.மு.க. ஆதரவு வோட்டு விழாது என்பது மட்டுமல்ல; தோற்கடிப்பதற்கான சதிகளைச் செய்வார்களோ என்ற பயம்தான். தி.மு.க., அ.தி.மு.க. என்று இருவருள் யார் ஆதரவையும் மறைமுகமாகப் பெற்றாலும்கூட, இதுவரை தாம் எடுத்து வந்த நிலைப்பாட்டுக்கு விரோதமாக இருக்கும் என்றும் யோசிக்கிறார் விஜயகாந்த். தனித்துப் போட்டியிடலாம் என்றாலும் தோல்வி பயம் அவரை வாட்டுகிறதாம். பாராளுமன்றத் தேர்தல் அக்னிப் பரீட்சைதான்!

- ஸ்ரீநி

■ ஆர்.வெங்கடேஷ்

# ஒன்றும் பிரச்னை இல்லை!

''நீங்கள் ஒரு புத்தமதத் தலைவர். இலங்கையில் இருப்பதும், ஆள்வதும் புத்தமதம்தான். தமிழர்கள் சொல்லொண்ணாத் துயரங்களுக்கு ஆட்படுகிறார்கள். நீங்கள் தலையிட்டு ஏதும் செய்ய முடியாதா?''

புத்தமதத் தலைவரான தலாய் லாமாவை நோக்கி வீசப்பட்ட முதல் கேள்வி இது. அதுவரை உற்சாகமும் கேலியும் துள்ளலுமாக தன் உரையை நிகழ்த்தியிருந்த தலாய்லாமாவின் குரலில், சட்டென ஒரு அமைதி, நிதானம். துயரம் அழுத்தும் குரலில் பதில் சொன்னார்,



''நான் நேரடியாக ஒன்றும் செய்ய முடியாது. நானும் புத்தமதத்தைச் சேர்ந்தவன்தான். இதுவரை என்னால் இலங்கையினுள் பயணம் செய்ய முடிந்ததில்லை; அனுமதிக்கப்பட்டதில்லை. ஆனால், வாய்ப்பு வரும்போது, நிச்சயம் என்னால் முடிந்ததைச் செய்வேன்.''

ஜனவரி 21 ஆம் தேதி சென்னை பல்கலைக்கழகம் ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சியில் தலாய் லாமா பங்கேற்றுப் பேசி முடித்தபின் நடந்தது கேள்வி-பதில் நிகழ்ச்சி.

தன்னால் முடிந்ததை முடியும் என்றும், முடியாததை முடியாது என்றும் நேரடியாகச் சொன்ன அந்த நேர்மை, பார்வையாளர்கள் அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

''நீங்கள் பதவி விலகப் போவதாகக் கூறிவருகிறீர்கள். என்ன சொல்ல வருகிறீர்கள் என்று தெளிவுபடுத்த வேண்டும்''-இது அடுத்த கேள்வி.

''தலாய் லாமாக்கள் அரசியல் நிர்வாகமும் ஆன்மிகப் பணியையும் இணைத்துப் பார்த்துக்கொள்ளத் தொடங்கியது ஐந்தாம் தலாய் லாமாவில் இருந்துதான். ஆனால், உலகெங்கும் மக்களாட்சி வந்துவிட்டது. மக்களே தம் தலைவர்களைத் தேர்வு செய்து ஆட்சி செய்யவேண்டும். அதுதான் சரியான முறை.

நான் அரசியல் நிர்வாகத்தையும் ஆன்மிகப் பணியையும் பிரித்துவிட்டேன். திபெத்தை ஆட்சி செய்யும் ஆட்சியாளர்கள் மக்களால் தேர்வு செய்யப்படுவார்கள். அவர்களிடம் முழு ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்துவிடுகிறேன். இனி இருப்பது ஆன்மிகப் பொறுப்புதான். இதுவும் மக்கள் முடிவுதான்.

இந்த தலாய் லாமா பரம்பரை நீடிக்க வேண்டுமா வேண்டாமா என்பதையும் மக்கள் முடிவு செய்யட்டும். அவர்கள் வேண்டாம் என்று நினைத்தால், என்னோடு இந்தப் பரம்பரை முடிவு பெறும்'' என்று ஆச்சர்யப்படுத்தினார்.

''பண்டைய திபெத்திய மருத்துவம் சிறப்பானதா?'' என்று அடுத்து வந்த கேள்விக்கு, சிரிப்புடன், 'ஆமாம்' என்ற தலாய் லாமா, ''என்வரையில் அது வேலை செய்யவில்லை. என் சிறுநீர

கத்தில் இருந்த கற்களை திபெத்திய மருந்துகளால் கரைத்துவிட முடியும் என்றார்கள். முடியவில்லை. நான் அறுவை சிகிச்சைதான் செய்துகொண்டேன்'' என்றார்.

''என்னிடம் வந்தால், நோய் தீரும் என்றும் ஏதோ மந்திர சக்தி இருக்கிறது என்றும் சிலர் நினைக்கிறார்கள். நிச்சயம் கிடையாது. நான் உங்களைப் போல் சாதாரணமானவன். ஒரே ஒரு வித்தியாசம், நான் நிறைய நாடுகள் பயணப்பட்டிருக்கிறேன். மனிதர்களைச் சந்தித்து இருக்கிறேன். அந்த அனுபவம் உண்டு.

மனிதனின் எல்லா பிரச்னைகளுக்கும் அவனே காரணம். பொருளாதாரச் சரிவா? ஊக வணிகம், பேராசை, மூடி மறைக்கும் தன்மை இவையெல்லாம் காரணம். இதையெல்லாம் ஏற்படுத்தியது யார்? மனிதன் தானே?'' என்று தன் உரையில் மிக விரிவாக உலக நிலைமைகளை எல்லாம் தொட்டுச் சென்றார் தலாய் லாமா.

அவரது உரையின் மையமாக இருந்தது கல்விதான். இறை நம்பிக்கையையோ இன்னபிற நம்பிக்கைகளை யோவிட கல்வியையே அவர் முக்கியப் படுத்தினார். கடைசியாகக் கிளம்பும் போது, மீண்டும் ஒருமுறை மைக்கைப் பிடித்த தலாய் லாமா,

''இதுவரை நான் கூறிய செய்திகளை யோசித்துப் பாருங்கள். உபயோகமாக இருந்தால், மேலும் அது பற்றி யோசியுங்கள். உபயோகமில்லை என்றால், மறந்துவிடுங்கள். ஒன்றும் பிரச்னை இல்லை'' என்றார். ●




★ தலாய் லாமா

# தஞ்சாவூர்க் கவிராயர்

எல்லோரையும் போல
முதலில் வாழைப்பழத்தின்
தோலை உரித்துச்
சாப்பிடுவதற்கு முன்
மஞ்சள் நிறத்தை உரித்துச் சாப்பிடு.

எல்லோரையும் போல
கடவுளைத் தொழ
அவசரப்படாதே
கோயிலைத் தாங்கும்
தூண்களைத் தொழு
முதலில்

எல்லோரையும் போல
பரிமாறியவுடன்
கைவைத்து விடாதே இலையில்
முதலில்
பரிமாறும் கையைப் பார்த்து
நன்றி சொல் -
வீடானாலும் ஓட்டல் ஆனாலும்



எல்லோரையும் போல
நீ ஓட்டிச் செல்லும் வாகனம் ஓர்
இயந்திரம் என்று
எண்ணிவிடாதே
அதனிடம் பேசு முதலில்
போகலாமா என்று கேள்
அப்புறம் புறப்படு.

எல்லோரையும் போல
பகல் முழுவதும் ஏதாவது
செய்து கொண்டிராதே
செய்து கொண்டிருப்பது
ஏதாவது உனக்குள்
செல்லும்படி பார்த்துக் கொள்.

படுத்ததும் போர்வையைத்
தேடாதே எல்லோரையும் போல.
இருட்டை இழுத்துப்
போர்த்திக் கொள்
முதலில்.

**வாழ்வின் வெற்றிக்கான இலக்கை நோக்கி பயணிக்க - அறிவியல், தொழில், கல்வி, இலக்கியம் என நான்குவழிப் பாதைக்கான திறவுகோலாய் இந்த வாரம்...**

## www.tips4students.com

வெளிநாடுகளுக்குச் சென்று கல்வி கற்க விரும்பும் மாணவர்களுக்கு, பயனுள்ள தகவல்களை அளிக்கும் இணைய தளம் இது.

வெளிநாடுகளில் தங்கிப் படிக்கும்போது எதிர்கொள்ள வேண்டியிருக்கும் கலாசார சிக்கல்கள், இணையவழிப் பட்டப்படிப்புகளின் நிறைகுறைகள், உதவித்தொகை பெறுவதற்கான தகுதிகள், சர்வதேச காப்பீடுகள் பற்றிய விவரங்கள் என்று மாணவர்கள் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டிய தகவல்களைக் கொண்டிருப்பது இத்தளத்தின் சிறப்பு.



அருந்ததி ராய்

## www.littlemag.com

தீவிர வாசகர்களால் 'டி.எல்.எம்' என்று செல்லமாக அழைக்கப்படும் 'தி லிட்டில் மாகஸின்' இதழின் இணைய வடிவம். தென்னாசியாவின் குறிப்பிடத் தக்க எழுத்தாளர்களின் கட்டுரைகள், கதைகள், கவிதைகள், நாடகங்கள் என்று ஒவ்வொரு இதழும் பாதுகாக்கப்பட வேண்டிய கலைப் பொக்கிஷம். உலகமயம், கல்வி, பாதுகாப்பு என்று அவ்வப்போது சிறப்பிதழ்களும் வெளிவருகின்றன. அஷிஸ் நந்தி, கமலா தாஸ், அருந்ததி ராய் என்று புகழ் பெற்றவர்களின் பங்களிப்புகளும் அடிக்கடி உண்டு.

# 'வலை'யோடு விளையாடு

# நான்கு வழிப் பாதை

## www.monthlyreview.org

**அ**றிவுத்துறையினரின் மத்தியில் அரை நூற்றாண்டு காலத்துக்கும் மேலாக செல்வாக்கு பெற்று விளங்கும் ஆய்விதழின் இணைய வடிவம் இது. உலகப் புகழ்பெற்ற இயற்பியல் விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் 'சோஷலிசத்தின் தேவை' என்ற கட்டுரையோடு தொடங்கிய இந்த இதழின் பயணம், நோம் சாம்ஸ்கி போன்ற சமகால அறிவுஜீவிகளால் அதே தீவிரத்துடன் இன்றும் தொடர்கிறது.

முந்தைய இதழ்களும் இத்தளத்தில் வாசிக்கக் கிடைக்கின்றன. தற்போதைய ஜனவரி இதழ் கியூபா ஸ்பெஷல்...



• ஃபிடல் காஸ்ட்ரோ

## www.enterpreneur.com

**பு**திதாகத் தொழில் தொடங்க முனைபவர்களின் முக்கிய மூலதனமே அவர்கள் அடியெடுத்து வைக்கும் தொழிலைப் பற்றிய அறிவுதான். இந்த அறிவை மேலும் செழுமைப்படுத்திக்கொள்ள விரும்புபவர்களுக்கு, இத்தளம் இலவசமாய்க் கிடைத்த வரம்.

தொழில் திட்டங்கள், வாடிக்கையாளர்களை அடையாளம் கண்டறிதல், நிதியாதாரங்களைத் திரட்டுவதற்கான வழிமுறைகள், சுய மதிப்பீடுகள், உற்சாகப்படுத்தும் சாதனை வரலாறுகள், இளம் தொழில் முனைவோருக்கான ஆலோசனைகள் என்று வகைப்படுத்தப்பட்டிருக்கும் குறிப்புகள் வருங்காலத் தொழிலதிபர்களுக்கு வழிகாட்டுபவை.

- ஸாந்தி



# போராடிப்

**மணற் கொள்ளையை எந்த ஆட்சி வந்தாலும் தடுத்து நிறுத்த முடியாது. எல்லாருக்கும் கட்சி பாகுபாடு இல்லாமல் இதில் பங்கு உண்டு. என்று**

- பயணத்தில் ஒரு இளைஞர் சொன்னது என்னை வெகுவாகவே வருத்தமடைய வைத்தது என்கிறார்,

பழம்பெரும் காங்கிரஸ்காரரான நெல்லை ஜெபமணியின் மகன் ஜெபமணி மோகன்ராஜ் (வயது 57). தமிழக காவல் துறையில் இன்ஸ்பெக்டராக இருந்து ஓய்வு பெற்றவர். இன்று மாநிலமெங்கும் மலிந்து போய்விட்ட மணற் கொள்ளையைக் குறித்து மக்கள் மத்தியில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் நோக்கத்துடன், அண்மையில் ஜெபமணி மோகன்ராஜ் ஜனதா கட்சியின் சார்பில் தாமிரபரணிக் கரையிலிருந்து புறப்பட்டு, சென்னை வரை 32 நாட்களில் சுமார் 800 கி.மீ. தூரம் 'மணல் யாத்திரை' மேற்கொண்டார். அப்போது அவர் சந்தித்த அனுபவங்களைச் சொன்னபோது பகல் நேர ஆற்று மணலாய் வார்த்தைகளில் சூடு.

**1989**ல், என் தந்தை நெல்லை ஜெபமணி, மலிவு விலை மதுவை எதிர்த்துப் பிரசாரம் செய்து 22 நாட்கள் பாத யாத்திரை மேற்கொண்டார். தனி மனிதராக நின்று கேஸ் போட்டு, தாமிரபரணி ஆற்றில் மணல் அள்ள நீதிமன்றத் தடை பெற்றார். இந்த உந்துதல் காரணமாகவே நான் மணல் யாத்திரை மேற்கொண்டேன்.

அரசு மணல் குவாரிகளால், அரசாங்கத்துக்கு லாபமில்லை. உதாரணத்துக்கு, தூத்துக்குடி மாவட்டம் தாமிரபரணி ஆற்றில் குரங்கணி-மங்கலக்குறிச்சி அரசு மணல் குவாரிகளிலிருந்து சுமார் மூன்று வருடம் இரவு பகலாக மணல் காண்டிராக்டர்கள் மணல் அள்ளி, ஒவ்வொருவரும் ஐந்நூறு கோடி, ஆயிரம் கோடி என்று சம்பாதித்தாலும், தகவல் உரிமை சட்டத்தின்படி எனக்குக் கிடைத்த தகவல்: இந்தக் காலகட்டத்தில் அரசுக்குக் கிட்டிய வருமானம் இரண்டு கோடி ரூபாய்கூட இல்லை. குரங்கணி ஆற்றில் இப்போது மணல் கிடையாது. மணல் திருட்டை ஒருவர் படம்பிடித்துவிட, கொள்ளையர்களின் ஆட்கள் சூழ்ந்து கேமராவைப் பறிமுதல் செய்ய, அப்புறம் போலீஸ் தலையிட்டு, கேமராவை மீட்க வேண்டி இருந்தது.

மாநிலமெங்கும் நடக்கும் மணற் கொள்ளையை எதிர்த்து பொது நலன் விரும்பிகளும், கம்யூனிஸ்ட் கட்சியினரும் போராட்டம் நடத்தினாலும், எதற்கும் துணிந்த மணற்கொள்ளைக்காரர்களைத் தடுக்க முடியாமல், சோர்ந்து போய், வேதனையில் இருக்கிறார்கள். ''உங்கள் ஆதரவைத் தெரிவிக்கும் வகையில் என்னுடன் அடுத்த ஊர் வரையாவது பாதயாத்திரை





ஜெபமணி மோகன்ராஜ்

# பயனில்லை!

யில் கலந்துகொண்டு தார்மீக ஆதரவு அளியுங்கள்'' என்று சொன்னபோது, மணற்கொள்ளைக்காரர்களுக்குப் பயந்து நழுவிவிட்டார்கள்.

நெல்லை வட்டார போலீஸ்காரர்களே, ''சீக்கிரமாக ஊரைவிட்டுச் சென்றுவிடுங்கள்! உங்கள் உயிருக்கு எப்போதும் ஆபத்து ஏற்படலாம்'' என்று எச்சரித்து அவசரம் அவசரமாக அனுப்பி வைத்தார்கள்.

மணல் யாத்திரையின்போது, என்னைச் சந்தித்த ஒரு இளைஞர், ''நான்கூட வேலை இல்லாப் பட்டதாரியாக இருந்தபோது, மணற்கொள்ளையை எதிர்த்துப் போராட்டம் நடத்தியவன்தான். போராடிப் பயனில்லை என்று எனக்குப் புரிந்தது. ரெண்டு மணல் லாரி வாங்கி, லோடு அடிக்க ஆரம்பித்தேன். இன்று வசதியான வாழ்க்கை வாழ்கிறேன்'' என்றார்.

மேலும்....

- விருதுநகரில் 'அர்ஜுனா நதி' என்று ஒரு ஆறு இருந்தது. அந்த ஆறே இன்று காணாமல் போய்விட்டது.
- கடலூர் மாவட்டத்தில், வெலிங்டன் ஏரி என்ற ஏரியைத் தூர்வார 25 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால் வேலை இன்னமும் ஆரம்பிக்கப்படவே இல்லை.
- தமிழ்நாடு எங்கும் பரவலாக பார்த்தினியமும், வேலிக்காத்தானும்தான் காணப்படுகின்றன.
- சாலாவதி என்ற ஊரில் இரண்டு லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட பொது நூலகம் இன்னமும் திறக்கப்படவில்லை.
- கிராமங்களில் கூட காலை, மாலை எப்போதும் டாஸ்மாக் கடைகளில் கூட்டம் மொய்ப்பதைப் பார்க்க வேதனையாக இருந்தது.
- நெடுஞ்சாலைகளில் செல்லும் லாரிகளை நிறுத்தி, டிரைவர்களுக்குப் பணம் கொடுத்துவிட்டு, லாரிகளின் டீசல் டேங்குகளிலிருந்து டீசலை எடுத்துக்கொண்டு, அதற்குப் பதிலாக மண்ணெண்ணெய் ஊற்றிக் கலப்படம் செய்வது ரொம்ப சகஜமாக நடக்கிறது.

.... இவையெல்லாம் எனது மணல் யாத்திரையின் போது வெளிப்பட்ட தமிழக அவலங்களின் சில சான்றுகள்'' என்று படபடத்து முடித்தார்.

சந்திப்பு, படம்: **கௌதம் ராம்**

''உடல் ஊனமுற்றவர்களுக்காக, நான் நடனப் பள்ளி நடத்துவதற்கு என்ன காரணம் என்று கேட்கிறார்கள். ஊனமுற்றவர்களுக்கு உடலில் ஏற்படும் வலியைவிட மனத்தில் ஏற்படும் வலி அதிகம். நடனமும் இந்த வலியை ஆற்றும் முயற்சிதான்'' என்கிறார் இயக்குநரும் நடிகரும் டான்ஸ் மாஸ்டருமான லாரன்ஸ்.




# டான்ஸ் யோகா இன்னும் பரவணும்!

''சிறு வயதில் மூளைக் காய்ச்சலால் கை-கால்களை அசைக்க முடியாமல் முடங்கிக்கிடந்தேன். தாயின் அரவணைப்பாலும், கடவுள் கிருபையாலும் மீண்டும் எழுந்து நடக்க ஆரம்பித்தேன். இந்தச் சம்பவத்தின் தூண்டுதலால்தான் நான் ஒரு நல்ல நிலைக்கு வந்தபோது ஊனமுற்ற குழந்தைகளுக்காகவும், பெற்றோரால் கைவிடப்பட்ட மற்றும் அனாதை குழந்தைகளுக்காகவும் 'லாரன்ஸ் சாரிடபிள் டிரஸ்ட்' எனும் தொண்டு நிறுவனத்தைத் துவங்கினேன்'' என்ற லாரன்ஸிடம்...

***ஊனமுற்றவர்களுக்கு நடனம் மட்டும்தான் ஆறுதலா?***

''எனக்குத் தெரிந்ததை, என்னால் முடிந்ததைத்தானே செய்ய முடியும். இது தவிர சுயதொழில்களைக் கற்றுத் தருதலும், நடனத்தைத் தவிர்த்து அவர்களுக்குள் பொதிந்திருக்கும் ஆற்றல்களை வெளிக்கொண்டு வருதலுமே இந்த அமைப்பின் பணி.''

***அடுத்த பிரபுதேவா யார்? அடுத்த அப்துல் கலாம் யார்? இதில் எந்தக் கேள்வி நம்மிடையே புழக்கத்தில் இருக்க வேண்டும்?***

''பொழுதுபோக்கு வேறு, ஆக்கபூர்வமான விஷயம் வேறு என பிரித்துப் பார்க்கும் திறன் நம்ம யங் ஸ்டார்களுக்கு நிறைய உண்டு. டி.வி. நடனத்தை மனத்தில் வைத்து, வளர்ச்சிக்கான கனவு இல்லை எனச் சொல்ல முடியாது.''

***'மானாட மயிலாட', 'ஜோடி நம்பர் ஒன்' என சேனல்கள் டான்ஸ் இல்லன்னா வாழ்க்கைல வேற ஒண்ணுமில்ல என்கிற மாதிரி மாறி வருகின்றனவோ?***

''இளைஞர்களை எளிதில் ஈர்க்கும் டான்ஸ் யோகா வேறு வகையில் சேனல்களில் வருகிறது. பரவுகிறது. இது யோகா பரவல். இன்னும்

பரவணும். மனத்தை, உடலைப் பலமாக்கும் டான்ஸ் வேற ஏதாவது கெடுதலை உண்டாக்குதா என்ன?''

**ஹீரோவாக நடிப்பீர்களா? இயக்குநராகத் தொடருவீர்களா?**

''நான் கதாநாயகன் அல்ல. கதைக்கான நாயகன். அந்த மாதிரி ஹீரோவா தொடர்ந்து நடிப்பேன்; இருபத்துநான்கு டிபார்ட்மென்ட்டை நிர்வகிக்கும் சரியான டைரக்டர் வேலையை விடாமலேயே! நான் சமீபத்தில் விட்டது என் கோபத்தைத்தான்.''

**டான்ஸ் அலுத்துப் போகும் நேரம் எப்போ?**

''காசிமேட்டில் வெறும் ஒன்பதாவது படிச்ச என்னை, உலகம் பார்க்க வெச்ச பல்கலைக்கழகம் டான்ஸூம் சினிமாவும்தான். அது எனக்கு உயிர்... அது எப்படி அலுத்துப் போகும்?''

**- ராகவ்குமார்**

* லாரன்ஸ்



# சுதந்திரம் கேட்டு 4,455 ஜோடிகள்!





வீட்டில் வெங்காயம், தக்காளி சமைக்க என் கணவர் என்னை அனுமதிப்பதில்லை; மேற்கத்திய உடைகள் அணிய என் கணவர் என்னை அனுமதிப்பதில்லை; இவையெல்லாம் என்ன என்கிறீர்களா? 2008ல் மும்பை கோர்ட்களில் விவாகரத்து கேட்டு வழக்குப் போட்ட மனைவியர் சொன்ன காரணங்கள்தான். கடந்த வருடம் மட்டும் 4455 தம்பதிகள் விவகாரத்து கேட்டு கோர்ட்டுக்குப் போயிருக்கிறார்கள். முந்தைய வருடத்தை விட 320 கேஸ்கள் அதிகம். கடந்த 7 வருடங்களில் டைவர்ஸ் கேஸ்கள் 54 சதவிகிதம் அதிகரித்துள்ளன.

(யுவர் ஆனர்! அவங்களை எல்லாம் ஒரு தபா கல்கில வர விஜய் நாகஸ்வாமியோட 'ஹாய்! டார்லிங்!' தொடரைப் படிக்கச் சொல்லுங்க.)

அமெரிக்காவில் இருக்கும் மராத்தி மண்டல் கடந்த 25 ஆண்டுகளாகச் செயல்பட்டு வந்தாலும், மற்ற மொழிக்காரர்கள் போல பெரிய அளவில் செயல்படவில்லை. இந்தக் குறையைப் போக்கும் விதமாக தனது வெள்ளி விழாவை ஒட்டி 'முதல் உலக மராத்தி இலக்கிய மாநாடு' நடத்தப் போகிறது. மராட்டிய முதல்வர் அஷோக் சவான் அதற்காக முதலமைச்சரது நிதியிலிருந்து 25 லட்சம் ரூபாய் நிதி அளிக்க உத்தரவிட்டிருக்கிறார்.



● அஷோக்சவா

(அப்புறம் மராத்திக்கு செம்மொழி அந்தஸ்து கேக்க மாட்டீங்களே?)

சமீபத்திய மும்பை தீவிரவாதத் தாக்குதலையடுத்து மகாராஷ்டிர மாநில அரசு, மும்பை போலீசுக்கு 20 கோடி பட்ஜெட்டில் நவீன உபகரணங்களை வாங்க உத்தரவிட்டுள்ளது. டார்ச் லைட்டுடன் கூடிய புல்லட் புரூஃப் ஹெல்மெட், புல்லட் புரூஃப் ஜாக்கெட், சாட்டிலைட் ஃபோன்கள் போன்றவை

மும்பையின் மலபார் ஹில் பகுதியில் ஒரு மாருதி எஸ்டீம் கார் படு ஸ்பீடாக போய்க் கொண்டிருக்க, அதை ஒரு போலீஸ்காரர் துரத்திக் கொண்டு போகிறார். கார் பறந்து விட்டது. தப்பிய காரை இன்னொரு போலீஸ்காரர் நிறுத்த முயல, கார் வேகமாக அவரை நோக்கிப் பாய, அந்தத் துணிச்சல்கார போலீஸ்காரர், அப்படியே காரின் முன்பக்கக் கண்ணாடி மீது பாய்கிறார். டிரைவர் சடன் பிரேக் போட, போலீஸ்காரர் கீழே விழுகிறார். கார் பறக்கிறது. மும்பை ராஜ்பவன் பகுதிக்கு வரும்போது, மும்பை போலீஸ் அந்தக் காரை மடக்கிப் பிடிக்கிறது. காரில் இருந்த அப்பாஸ் அலி, முகம்மது லாலா கான் இருவரும் கைது செய்யப்படுகிறார்கள். மும்பையில் உள்ள சிட்டி பேங்க் கிளை ஒன்றில் டாலர் நோட்டுகளை, இந்திய ரூபாயாக மாற்றுவது போல கேஷியரிடம் பேசி, பணத்தைக் கொள்ளை அடித்துக்கொண்டு தப்பிச் செல்ல முயன்றபோதுதான் போலீசில் சிக்கிக் கொண்டார்கள். ஏற்கெனவே இதுபோல செய்து கொள்ளையடித்தவர்கள் இவர்கள் என்பதால், மும்பை போலீஸ் எச்சரிக்கையாக இருந்து, இந்தமுறை கொள்ளையரைக் கோழி போல அமுக்கிவிட்டார்கள்.



*(சிக்கிய கோழிகளிடமிருந்து மும்பை போலீஸ் தங்க முட்டை எடுக்காமல் இருந்தால் சரி!)*

- பரத்ராம்

மட்டுமில்லாமல், அதிவேகப் படகுகள் போன்றவற்றையும் வாங்கப் போகிறார்கள்.

*(அப்படீன்னா இன்னொரு கடல் வழித் தாக்குதல் நடக்குமுன்னு எதிர்பார்க்க றாங்களா?)*





# அக்கம் பக்கம்

# உள்ளுணர்வே உண்மையான கைடு!

இலங்கை கண்டியிலும் 'செல்வி'க்காக நாங்கள் எடுக்கவேண்டிய ஷூட்டிங்கை எடுத்து முடித்து விட்டோம். அதற்குப் பிறகு அங்கிருந்து கிளம்பி, கொழும்பு வந்து சேர்ந்தோம். அன்றைக்கு கிறிஸ்துமஸ், டிசம்பர் இருபத்தைந்தாம் தேதி.

கொழும்பில் ஒரே ஒரு நாள்தான் ஷூட்டிங் பாக்கியிருந்தது. அடுத்த நாள். அதை எடுத்து முடித்த பிறகு எல்லோரும் ஊருக்குத் திரும்புவதாக இருந்தோம். இருபத்தெட்டாம் தேதி கிளம்புவதற்கு எல்லோருக்கும் ஃபிளைட்டுக்கு ரிசர்வ்கூட செய்தாகிவிட்டது.

யூனிட்டில் இருந்தவர்கள் ஒரு நாள் ஊரைச் சுற்றிப் பார்க்க விரும்பினார்கள். எனவே அன்றைக்கு ஷூட்டிங்கை விரைவாக முடித்துவிடவேண்டும் என்று திட்டமிட்டிருந்தோம்.

இயக்குநர் சுந்தர் கே.விஜயன் என்னிடம். 'மேடம்! இன்னிக்கு எடுக்க வேண்டியது கொஞ்சம் பெரிய சீன். சீக்கிரம் வந்துடுங்க' என்று சொல்லியிருந்தார்.

அன்றைக்கு ஷூட்டிங் எடுக்க இருந்த இடம் கடற்கரை.

நான் அதிகாலையிலேயே தயாராகிவிட்டேன். குறித்த நேரத்தில் என் அறையில் இருந்து கிளம்பினேன். வண்டியில் வரும்போது கடற்கரை வழியாகத்தான் வந்தேன். எனக்கு ஏதோ வித்தியாசம் தெரிந்தது. கடல் ஒரு மாதிரியாக, வற்றிப் போனது போல உள் வாங்கி இருந்தது.

படிக்கிற காலத்தில் இருந்தே எனக்குக் கடலோடு பரிச்சயம் உண்டு. கடற்கரையில்தான் நான் படித்த பள்ளி இருந்தது. அன்றைக்குப் பார்த்தது போல அதற்கு முன்பு நான் எப்போதும் கடலைப் பார்த்ததில்லை.

'என்னடா இது! இப்படி இருக்கிறது!' என்று எனக்குத் தோன்றினாலும் அப்போது நான் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. என் எண்ணம் முழுக்க அன்றைக்கு நான் நடிக்கவேண்டிய காட்சியிலும் வசனத்திலுமே இருந்தது.

ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்தவுடன்

நான் கிட்டத்தட்ட கடலை மறந்தே போனேன். ஒரு பக்கம் மேக்கப் போட்டுக் கொண்டே, நான் நடிக்கவேண்டிய காட்சியை அசைபோட்டுக் கொண்டிருந்த போது என் கணவரிடம் இருந்து தொலைபேசி அழைப்பு வந்தது.

அவர் ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டு ஒரு விஷயத்தைச் சொன்னார். 'எங்கேயோ பூகம்பமாம். கடற்கரையில எல்லாம் தண்ணி ஏறிடுச்கன்னு சொல் றாங்க. என்னன்னு சரியாத் தெரியல. எனக்கு இன்னும் நியூஸ் கரெக்டா வரலை' என்று சொன்னார். அவர் பேசிக் கொண் டிருக்கும்போதே தொலைபேசி இணைப்பு கட் ஆகிவிட்டது. நான் முயன்று பார்த்தேன். அவர் செல்ஃபோன் லைன் கிடைக்க வில்லை.

யூனிட்டில் இருந்தவர்கள் சில விஷயங்களைச் சொன்னார் கள். எல்லாமே வதந்தி போல இருந்தது எனக்கு. 'பூகம்பம்', 'கடல்ல புயல் வரும் போல இருக்கு'... இப்படியான வதந்தி கள். ஆனால் யாருக்கும் இன்னதுதான் வரப்போகிறது என்று சரியாக சொல்லத் தெரிய வில்லை. வரப் போவது 'சுனாமி', பல்லாயிரக்கணக் கான உயிர்களை பலிவாங்கப் போகிறது, பெரிய நாசத்தை விளைவிக்கப் போகிறது என் பது எங்கள் யாருக்கும் தெரியவில்லை. உண்மை யில் அப்போது 'சுனாமி' என்று ஒன்று இருப்பதேகூட அங்கிருந்தவர் களுக்குத் தெரியாது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கடலில் இருந்த நீர் அப்படியே பின்னால் போய்க்கொண்டு இருந்தது. அந்த மாதிரியான சந்தர்ப்பங்களில் எனக்கு எப்போதும் கேட்கும் எச்சரிக்கை அப்போது என் மனத்துக்குள் கேட்டது.

நான் சுந்தர் சே விஜயனிடம், 'சுந்தர்! நாம இனிமே இங்க இருக்க வேணாம், கிளம்பலாம்' என்று சொன்னேன்.

'இல்ல மேடம்! இன்னும் ரெண்டே ரெண்டு ஷாட்டுதான். முடிச்சிட்டுப்



போயிடலாம்' என்று சொன்னார் அவர்.

'வேண்டாம். இத்தோட ஷூட்டிங்கை முடிச்சிடலாம். யூனிட்ல இருக்கறவங்க எல்லாரையும் பாஸ்போர்ட்டையும் பணத்தையும் எடுத்துக்கிட்டு பஸ் ஏறி நம்ம ஆஃபீஸுக்கு போகச் சொல்லிடுங்க' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன். இலங்கையில் எங்களுடைய ராடன் அலுவலகம் ஒன்று இருந்தது. அங்கு எல்லோரையும் போகச் சொல்லி, அவர்களை ஏற்றி, எல்லா வண்டிகளையும் அனுப்பி விட்டுக் கடைசியாக அங்கிருந்து கிளம்பினேன்.

யதேச்சையாகத் திரும்பிப் பார்த்தால் கடலிலிருந்து பிரம்மாண்டமாய் ஒரு அலை கிளம்பி வந்து கொண்டிருந்தது. நாங்கள் வண்டியை விரட்டிக்கொண்டு ஒரு மேட்டில் ஏறினோம். மேடு என்றால் சாதாரணமானது இல்லை. மிகப் பெரிய மேடு. திரும்பிப் பார்த்தால், அந்த அலையில் இருந்து கிளம்பிய நீர், மேட்டின் உச்சி வரைக்கும் வந்துவிட்டது. நாங்கள் தப்பியதை 'தெய்வச் செயல்' என்றுதான் சொல்லவேண்டும்.

அதற்குப் பிறகுதான், வந்தது 'சுனாமி' என்று தெரிந்தது. எல்லாம் முடிந்து ஒரு வழியாக ஊர் திரும்பினோம். 'ஏதோ நடக்கப் போகிறது' என்ற உள்ளுணர்வு கொடுத்த சமிக்ஞையை மட்டும் நான் அலட்சியப்படுத்தியிருந்தால் சுனாமியில் காணாமல் போயிருந்திருப்பேன்.

**நா**ன் நடிக்க வந்த காலத்திலிருந்து ராடனை நிர்வாகம் செய்கிற இன்றைக்கு வரைக்கும் என் உள்ளுணர்வு சொல்கிறபடி, எனக்கு எது சரி என்று தோன்றுகிறதோ அதன்படிதான் நான் நடந்து வருகிறேன். இதுவே எனக்குப் பல வெற்றிகளைத் தந்துள்ளது. நம்மை வழிநடத்தும் உண்மையான கைடு உள்ளுணர்வுதான். கல்கி வாசகர்களுடன் எனது அனுபவங்களைப் பகிர்ந்துகொண்டது நெருக்கமான தோழர்களுடன் பேசியது போன்ற மகிழ்ச்சியை உண்டாக்கியுள்ளது. அந்த உணர்வோடு இன்னொரு நல்ல சந்தர்ப்பத்தில் மீண்டும் உங்களோடு பேசுவேன். இந்த வாய்ப்பினை அளித்த கல்கிக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ராடனை நிர்வாகம் செய்கிற இன்றைக்கு வரைக்கும் என் உள்ளுணர்வு சொல்கிறபடி தான் நடந்து வருகிறேன்.**

(முற்றும்)

எழுத்தாக்கம்: **பாலு சத்யா**



''டாக்டர், ஆபரேஷன் பண்ணினா பிழைக்க முடியுமா?''

''இதுல என்ன உனக்குச் சந்தேகம்? ஆபரேஷன் பண்ணினா நான் மட்டுமில்ல, பூமாலை விக்கிறவர், சவப்பெட்டி செய்யறவர், வெட்டியான், மேளக்காரன், தேர் கட்டுறவன் எல்லோருமே பிழைக்கிறாங்க.''

- **சோலோ செல்வாஷ்**



''நீங்க முட்டாளா, புத்திசாலியா?''

''ஏன் கேட்கறீங்க?''

''முட்டாள், தன்னை ஒரு புத்திசாலின்னு சொல்லிப்பான்; புத்திசாலி, தன்னை எப்பவுமே ஒரு முட்டாள்னு சொல்லிப்பான்; நீங்க என்ன சொல்றீங்க?''

– வெ. சீதாராமன்

''பென்சில்ல ஆட்டோகிராப் போடச் சொல்றீங்களே... ஏன்?''

''உங்க புகழ் மங்கறப்ப அழிச்சுக்கலாம் பாருங்க...!''

– ஜே. தனலட்சுமி








''ஆன்மிகவாதிகள் பெயருக்கு முன்னால் 'அருள்மிகு'ன்னு பத்திரிகையில் அடிக்கப் போறீங்க சரி! விழாவுக்கு தலைமை தாங்கற மின்துறை அமைச்சர் பெயருக்கு முன்னால் என்ன அடைமொழி போடப் போறீங்க?''

''இருள்மிகு!''

– சம்பத்குமாரி

இது என்னவென்று யாரேனும் சொல்லுங்களேன். இந்த என் பழக்கம் என்னுள், எப்போது ஆரம்பித்தது?

அடர்ந்த நீண்ட கூந்தலுடன் செந்தாழம்பூ நிறத்தில் எங்கள் பள்ளிச் சீருடையில் அந்தப் புது மாணவியைப் பார்த்தபோது, நேற்று படித்த புத்தகத்தில் வந்த ஓவியப் பெண் வானதி அங்கு நிற்பது போல ஒரு நிமிடம் என் கண்களுக்குத் தோன்றியது. அப்போதுதானா இந்தப் பழக்கம் என்னுள் தோன்றியது...?

பார்ப்பவரில் சிலருக்கு மட்டும்தான் என் மனம் இப்படி மேட்சிங் பார்க்கும். நான் பத்தாம் வகுப்பு படிக்கும்போது, ஏதோ காரணத்தால் என் அண்ணன் இறந்து போனான். அந்த வருத்தம் அழுந்த, அழுகை நிமிடங்களை, ஆதித்த கரிகாலனை கதையில் இழக்கும் நேரங்களில் எல்லாம் உணர்ந்து... விம்முவேன்.

பன்னிரண்டாம் வகுப்பில் எனக்கு வாய்த்த கணக்கு டீச்சர் ரவிதாசன்தான் என்று சொன்னால் கல்கியே அடிக்க வருவார். (அவ்ளோ சதி பண்ணி

## ஜெயக்குமாரி தணிகாசலம்

கணக்கே எனக்குப் புரியாம ஆக்கிட்டாங்க வேற ஒண்ணுமில்ல).

கடும் புயலிலும் மழையிலும் கடலில் கப்பலோட்டும் உடல் உரமும், துணிவும், அழகும் கொண்ட பெண் என் பெரியத்தைதான். வாழ்க்கை என்ற கடலில், பத்து வயதில் தாயை இழந்து, ஐந்து வயதுச் சிறுவனோடும் மூன்று மாத கைக் குழந்தையோடும் நின்ற தருணங்களை, கடந்து வந்த வாழ்க்கைப் பாடங்களை, நீந்தி வந்த நெருப்பு நிமிடங்களை அத்தை சற்றே வருத்தம் கலந்த புன் சிரிப்போடு கூறினாலும், கேட்கும் எனக்கு விம்மலுடன் அழுகை வெடிக்கும். இறுதி வரை தம்பி, தங்கைக்காக திருமணம்கூட செய்து கொள்ளாமல் வாழும் என் பெரிய அத்தைதான் அந்த அழகிய அபூர்வப் பூங்குழலி.

இந்த என் பழக்கம் கல்லூரி நாட்களில் வாய்விட்டு அப்பெண்களின் எதிரேயே சொல்லும் பழக்கமாகப் பரிணமித்தபோது, எனக்கே ஆச்சரியமாய்ப் போனது.



'சித்ரா அக்கா, நீங்க, பொன்னியின் செல்வன் கதையில வர, நந்தினி கேரக்டருக்கு சூப்பரா இருப்பீங்க.'

என்னைவிட ஒரு வருட சீனியர் சித்ராவிடம் இதைக் கூற, 'அவ யாரு? கதையில ஹீரோயினா? நெகட்டிவ் கேரக்டரா?'

என் சீனியர் சிந்தனையிலும், கேள்வியிலும் சீனியராகி என்னை மடக்க, மடக்கப்பட்டதின் பொருள் புரியாமல், 'கதையில், நந்தினி ஹீரோயின் கிடையாது' (இதுவரை கேட்டுவிட்டு கோபப்பட்டு அந்தப் பெண் எழுந்து போனது தெரியாமல், கண்களை மூடிக்கொண்டு அனுபவித்துச் சொல்லிக் கொண்டிருந்தேன்.)

'ஆனால், உலகின் நம்பர் ஒன் அழகு நந்தினிதான். செந்தழலுக்கும், சீறும் பாம்பின் சிலீர் அழகுக்கும், கூரிய வாளின் குபீர் அழகுக்கும் சொந்தக்காரி.' நான்

# மீண்டும் வந்தியத்தேவன்

ரசித்து சிலாகித்து நாலாய், எட்டாய், பதினாறாய் மடங்கி பொன்னியின் செல்வனுக்குள் மூழ்கிப்பப் போனேன்.

உறவினர்களில் - 'இவுகதான் நீ சொன்ன 'அறுவ' சாரா...?' என்று ஊரில் இருந்து வந்த என் பாட்டி, என் கணவரின் நண்பரைப் பார்த்துக் கேட்க, ராக்கம்மா கேரக்டரை என் பாட்டியிடம் பார்த்து அதிர்ந்த போதும்,

பொக்கை வாய் வழியே அந்த 'அறுவ' என்பது 'அரும'- என நண்பரின் காதில் விழுந்ததால்... அப்பாடா...!

பஸ்ஸில் போகும்போதும் பொது இடங்களிலும் புகை பிடிக்கும் 'புகை ஊதிகள்' எல்லோருமே எனக்குப் பாண்டிய நாட்டு சதிகாரர்கள்தாம்.

மதம்பிடித்த யானையைக் குழியில் தள்ளிவிட்டுவிட்டு, தான் மட்டும் அதே குழியில் இருந்து தப்பி வரும் ஆழ்வார்க்கடியானையோ, இன்னும் பல





# வெள்ளை மாளிகையில் இந்திய டாக்டர்!

அமெரிக்க அதிபர் ஒபாமாவின் பதவியேற்பை ஒட்டி நடைபெற்ற பிரத்யேக பிரார்த்தனைக் கூட்டத்தில் ஹிந்து அமைப்பின் சார்பில் கலந்துகொண்டு, அமெரிக்க வாழ் இந்தியர்களுக்குப் பெருமைசேர்த்துள்ளார் டாக்டர் உமா மைஸோரேக்கர்.

அமெரிக்காவில் வாழும் பல்வேறு மதத்தைச் சேர்ந்தவர்களுள் ஆறு மதத் தலைவர்களுக்கு, தேசிய அளவில் நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்தில் கலந்துகொள்ளுமாறு அழைப்பு விடப்பட்டது. அதில் ஹிந்து அமைப்பின் சார்பில் வடஅமெரிக்க ஹிந்து அமைப்பின் தலைவியாகப் பணியாற்றிவரும் டாக்டர் உமா மைஸோரேக்கருக்கும் வெள்ளை மாளிகையிலிருந்து அழைப்பு விடப்பட்டது. அமெரிக்காவின் மதநல்லிணக்கத்துக்கு ஒரு எடுத்துக்காட்டாக இந்த நிகழ்வு பார்க்கப்படுகிறது.

"அமெரிக்க அதிபர் ஹிந்து மதத்தின் பாரம்பரியத்தை மதித்து அதற்குரிய மரியாதையையும் அளித்தது. மிக்க மகிழ்ச்சியாக இருந்தது. இது எனக்கும், நான் கடந்த 31 வருடங்களாகச் சேவையாற்றி வரும், வட அமெரிக்காவின் முதல் இந்து திருக்கோயிலான நியூயார்க்கின் மஹா வல்லப கணபதி கோயிலுக்கும் கிடைத்த ஒரு மிகப் பெரிய பாக்கியம் என்றே கருதுகிறேன். அமெரிக்க அதிபர் அமெரிக்க மக்களுக்கு முதன் முதலாக ஆற்றிய உரையில் இந்து மதத்தைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசியதும் நிறைவாக உள்ளது" எனத் தெரிவித்துள்ளார் டாக்டர். உமா மைஸோரேக்கர்.

**- நளினி சம்பத்குமார்**

முக்கியக் கதாபாத்திரங்களின் அறிவுக் கூர்மையையோ பார்க்க இயலாதபோதும், எதற்கெடுத்தாலும் மிஸ் அண்டர்ஸ்டேண்ட் செய்யும் தோழிகள் கந்தமாறனாகவும், தியாகம் (உதவி) செய்யும் மனிதர்கள் மணிமேகலைகளாகவும் என்னுள் ஆங்காங்கே நிறைய ஆரம்பித்தனர்.

சில நாட்களுக்கு முன், கடைத் தெருவில் என் முன்னே சென்ற பெண்ணைக் கண்டதும், 'ஏங்க... மேடம், ஒரு நிமிஷம்' என்று அவரை ஓவர்டேக் எடுத்து முன்னாடி சென்று நின்றேன். அதற்குள் என் மனம் அந்தப் பெண்ணுக்குக் கொண்டை போட்டு, கழுத்தில் காதில் ஆபரணங்கள் பூட்டி, கைகளில் சேலையை ஒயிலாய்ப் பிடிப்பது போல ஒப்பனை செய்துவிட,

அப்பெண் குழப்பமாய் என்னை நோக்க, 'சொன்னா தப்பா நினைக்காதீங்க... அப்படியே குந்தவை மாதிரி இருக்கீங்க' என்று நான் அசடு வழிய, நிஷா புயலுக்குப் பின்னும் வெளுக்காத வானம் போல, குழப்ப ரேகைகள் அவர் முகத்தில் கூடாரமிட்டன.

'யார்... உங்க உறவுக்காரங்களா?'

'ம்ம்ம்'- என்று பலமாய்த் தலையை ஆட்டியபடி நகர்ந்த என்னை,

டேக் இட் ஈஸியாய்க் கடந்து சென்றார் அந்தக் குந்தவை.

இதெல்லாம் சரி... அங்கே யாருங்க அது? குதிரை... அதுவும் காற்றுக் குதிரை மீது மின்னல் சாட்டையைச் சுழற்றிக் கொண்டு போவது...? அட அது நான் தானே... இல்லை இல்லை வந்தியத் தேவன்தானே...?

நீ பெண்ணாச்சே... நீ எப்படி வந்தியத் தேவன்னு கேக்கறீங்களா? நான் பூரா காலில் சக்கரம் கட்டின மாதிரி பறக்கிற நானும் சகட யோகக்காரிதான். என்னை விட யாருக்கு அந்த கேரக்டர் பொருந்தும்... சொல்லுங்க பிரஜைகளே...! ●



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

# சொல்வதை தெளிந்து சொல்



**'மாஃபா' பாண்டியராஜன்**

ஒரு தொழிற்சாலை நிர்வாகம், தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவதும், அவர்களுக்கு எந்தவித முன்னறிவிப்பும் கொடுக்காமல் வேலையை விட்டு அனுப்புவதும் என... சகட்டுமேனிக்கு நிகழ்த்தியது. நிர்வாகத்துக்கு எதிராக பலமுறை புகார் செய்தும் அரசாங்கம் கண்டுகொள்வதாக இல்லை. காரணம், அந்நிறுவனம் அதிகாரிகளை நன்கு 'கவனித்தது'தான். இந்த நிலையில், நகரில் தொழிற்சாலை பாதுகாப்பு குறித்த மாநாடு ஒன்று நடந்தது. அதில் பேசுவதற்கு, தொழிற்சாலையின் தகவல் தொடர்பு அதிகாரி அழைக்கப்பட்டிருந்தார். அவர் பேசுவதற்கு விஷயங்களைச் சேகரிக்க சூப்பர்வைசர்களிடம் கலந்து ஆலோசிக்க நினைத்தார். ஓர் அறிவிப்பைத் தட்டச்சு செய்து தொழிலாளர்கள் பயப்படும் அறையைக் குறிப்பிட்டு, அந்த அறையில் சூப்பர்வைசர்களின் கூட்டம் நடைபெறும் என்று அனுப்பினார். ஆனால் கூட்டத்துக்கு யாரும் வரவில்லை. ஏனென்றால், எந்தக் காரணத்துக்காக மீட்டிங் என்று அறிவிப்பில் குறிப்பிடப்படாமல் இருந்தது. வேலையிலிருந்து தூக்கத்தான் நம்மை அழைக்கிறார்கள் என்று சூப்பர்வைசர்கள் பயந்தனர். மோசமான தகவல் தொடர்புக்கு இது உதாரணம்.

ஒரு நல்ல தகவல் தொடர்பு, பல ஆக்கபூர்வமான செயல்களுக்கு வழிகாட்டும்; தெளிவை உண்டாக்கும்; சிந்தனையைத் தூண்டும். சொல்வதைத் தெளிவாகவும், அழுத்தமாகவும் சொல்லத் தெரிந்திருப்பவர் நல்ல கம்யூனிகேஷன் மானேஜர் ஆகிவிடுவார். ஸ்பியர் கம்யூனிகேஷன்ஸ் என்ற நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாக வி.எஸ். ரமணா வேலை பார்த்து வந்தார். அப்போது தில்லி போலீஸின் இமேஜ் மக்களிடையே மிகவும் மட்டமாக இருந்தது. குண்டு வெடிப்பு, தொடர் கொலைகள், ஆட்கடத்தல் சம்பவங்கள் தினசரி அதிகமாகிக் கொண்டேயிருந்தது தான் காரணம். இந்த நிலையில் போலீஸின் இமேஜைத் தூக்கி நிறுத்த நல்ல தகவல் தொடர்பாளரை நியமிக்க முடிவு செய்து, ரமணாவை அணுகினார்கள். அடுத்த ஆறு மாத காலத்தில், பல விளம்பரங்கள் மூலமும், மக்களிடையே நேரடித் தொடர்புகள் மூலமும் தில்லி காவல் துறைக்கு

இருந்த அவப்பெயரைப் போக்கி, மக்களின் நண்பர்கள் காவலர்கள் என்று அவர்கள் மனத்தில் அழுத்தமாகப் பதியவைத்தார் ரமணா. இவரது திறமையைப் பார்த்த எல் அண்ட் டி நிறுவனம் இவரை இழுத்துப் போட்டுக் கொண்டது. இன்று நாற்பதாயிரம் பேர் வேலை செய்யும் இந்த நிறுவனத்தில் தகவல் தொடர்பு பிரிவின் தலைமை நிர்வாகியாக இருக்கிறார் ரமணா. நிறுவனம் அறுபது வயதைப் பூர்த்தி செய்தபோது, அதன் வரலாறு மற்றும் செயல்பாடுகள் தொடர்பான அருங்காட்சியகம் ஒன்றை அமைத்தார். எல் அண்ட் டி நிறுவனத்தின் ஊழியர் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டால், அவர் அந்த அருங்காட்சியகத்தை முதலில் பார்க்குமாறு சொல்லப்படுகிறார். இன்று இந்திய அளவில் சிறந்த கம்யூனிகேஷன் நிபுணராக மதிக்கப்படும் ரமணா, சென்னை கிறித்துவ கல்லூரியில் படித்தவர். ''ஒரு நல்ல கம்யூனிகேஷன் அதிகாரி ஊழியர்களிடையே பதியவைக்க வேண்டியது 'உங்களுக்காக இருக்கிறேன்; உங்களிடையே இருக்கிறேன்' என்ற கருத்தோட்டத்தைத்தான்'' என்று வெற்றிக்கான தாரக மந்திரத்தைச் சொல்கிறார் ரமணா.



* ரமணா




இன்று கம்யூனிகேஷன் அதிகாரி என்பது 360 டிகிரி வேலை என்கிறார்கள். இந்தத் தொழிலின் ஆதிப்பெயர் லையய்சன் ஆபீஸர். இது மக்கள் தொடர்பு அதிகாரி என்று உருமாறி, இப்போது கம்யூனிகேஷன் அதிகாரி என்ற புதுப்பெயரைப் பெற்றிருக்கிறது. இந்தப் பணிக்குரிய பொறுப்புகளும் விரிவடைந்து கொண்டே வந்து விட்டன. இந்தப் பொறுப்புக்கு ஒரு டிகிரியுடன் மாஸ் கம்யூனிகேஷன் அல்லது ஜர்னலிசம் மேல் படிப்புடன் வருபவருக்கு நல்வாய்ப்பு உண்டு. நிதி மற்றும் சந்தை குறித்த புரிதலும், அறிதலும், கூடுதல் பலம். நிர்வாகம் - ஊழியர்கள் தொடர்பு, நிர்வாகம் - அரசு மட்டத் தொடர்பு, நிறுவனப் பத்திரிகை நடத்துதல், நிறுவனம் தயாரிக்கும் பொருளை மக்களிடையே கொண்டு செல்வது, விளம்பரங்கள், மீடியா தொடர்பு,

ப்ரோடாகால் என்று பல்வேறு பணிகள் ஒரு நிறுவனத்தின் கம்யூனிகேஷன் துறையில் கவனிக்கப்படுகின்றன. மேலும், இப்போது பெரிய நிறுவனங்கள் மக்கள் நல்வாழ்வுப் பணிகளை மேற்கொள்வதை ஒரு சமூகக் கடமையாக வைத்திருக்கின்றன. நிறுவனத்தின் கம்யூனிகேஷன் துறையே இந்த வேலையையும் கவனிக்கிறது. எனவே, இந்தப் பணி செய்ய



ஆட்களின் தேவை அதிகமாகிக் கொண்டே போகிறது. தலைமைப் பொறுப்புக்குப் போகும்போது வருடத்துக்கு ஒரு கோடி சம்பாதிப்பவர்களும் உண்டு. துவக்கநிலை மற்றும் இடைநிலை கம்யூனிகேஷன் அதிகாரிகள், வருடத்துக்குப் பத்திலிருந்து, இருபத்தைந்து லட்சம் சம்பாதிக்கலாம்.

(வெளிச்சம் வீசும்)

எழுத்தாக்கம் : ஸ்ரீநி



# பாண்டி 'S BLOG

மும்பை தீவிரவாதிகள் தாக்குதல், சத்யம் நிதி நிறுவன மோசடி ஆகிய சம்பவங்களின்போது நமது ஆங்கில, இந்தி மொழி செய்தி சேனல்கள் நடந்துகொண்ட விதம் விமர்சனத்துக்குள்ளாகியிருக்கிறது. அச்சு ஊடகங்கள் தவறு செய்யும்போதோ, தனி மனிதனைப் பற்றி அவதூறாக எழுதும்போதோ புகார் கொடுக்க ப்ரஸ் கவுன்ஸில் என்ற அமைப்பு இருக்கிறது. காட்சி ஊடகங்களுக்கும் இதுபோல் 'செக்' வைக்க அமைப்பு இருப்பது நல்லது.

திருவனந்தபுரத்தில் யானை ஒன்று பாகனை துவம்சம் செய்து கொல்லும் காட்சியைக் காட்டினார்கள். அதைப் பார்க்கும் மென்மையான உள்ளங்கள் பாதிக்கப்படும் என்பது மீடியாவைக் கையாள்பவர்களுக்குத் தெரியாதா? அதே போல் சாமியார் ஒருவர் சிறுவனைத் தண்ணீரில் மூழ்கடித்துக் கொலை செய்யும் காட்சி, சட்டக் கல்லூரி மாணவர் வன்முறை போன்றவற்றைக் காட்டுவதால், ஆரம்பத்தில் மனஅதிர்வுக்கு உள்ளாகும் மனித மனங்கள், மென்ன மென்ன வன்முறைக்குப் பழகிப் போய் உணர்வு மழுங்கிவிடும் அபாயம் இருக்கிறது. அமெரிக்க தொலைக்காட்சிகளின் அபரிமித வன்முறை அச்சமூகத்திலும் ஊடுருவியிருப்பதைப் பார்க்கிறோம்.

சில மாதங்களுக்கு முன்னர், தில்லியில் கொலை செய்யப்பட்ட ஒரு பெண்ணின் தந்தையும், ஆசிரியை ஒருவரும், தொலைக்காட்சி ஒளிபரப்புகளால் கொச்சைப்படுத்தப்பட்டனர். அவர்களுடைய மனப்புண்ணுக்கு என்ன நிவாரணம்? செய்தி ஊடகங்கள் விழிப்புடன் இருப்பதால் மக்களுக்குத் தேவையான பல விஷயங்களை உடனுக்குடன் சொல்ல முடிகிறது என்பது வரவேற்கத்தக்கது என்றாலும், நடத்தை விதிகள் மிக அவசியம்.

4

ஹாய் டார்லிங்!

# கணவன்-மனைவி கமிட்மெண்ட்!

''கிச்சனை இவ்வளவு அசுத்தமாக வெச்சிருக்கீங்களே?'' மெஹர் கேட்ட போது, - 'மாமியார் என்கிற மரியாதை இல்லாமல் பேசுறா பாரு' என்று குமைந்தனர் அப்துல்லா தம்பதி. ''எனக்கு வயசாயிடுச்சு! முடியலை! வீட்டு வேலைகளைப் பொறுப்பா கவனிக்கத்தான் என் மகனுக்கு உன்னைக் கட்டி வெச்சேன். நீ என்னடான்னா வீட்டுக்கு வந்த விருந்தாளி மாதிரி ஒட்டாம நடந்துக்கறே!'' என்று பதிலளிக்க, மாமியார் - மருமகளுக்கு இடையில் பெரும் வாக்குவாதம் நடந்தது.

அன்று வீட்டுக்கு வந்த உறவினர் ஒருவரிடம், தனது மருமகள் பற்றிய ஆதங்கத்தைப் பகிர்ந்துகொள்ள, அவரோ கிளம்பும்போது, மெகரிடம் வந்து, ''பார்த்தா நல்ல பொண்ணு மாதிரிதான் இருக்கே! மாமியாரிடம் கொஞ்சம் மரியாதையா நடந்துக்கக் கூடாதா?'' என்று கொளுத்திப் போட, அன்று இரவு இம்ரான்

டாக்டர் விஜய் நாகஸ்வாமி

வீடு திரும்பியபோது, படுக்கை அறையில் ஒரு சுனாமியே ஏற்பட்டது. ''வீட்டுக்கு வர்றவங்ககிட்டே என்னைப் பத்திக் குறை சொல்றதும், அவங்க அட்வைஸ் பண்றதும் எனக்குத் துளியும் பிடிக்கலை'' மெகர் அழ, இம்ரான் அவளை சமாதானப்படுத்த, தூங்கும்போது நள்ளிரவாகிவிட்டது.

மறுநாள் மெகரின் அம்மா யதேச்சை யாக ஃபோன் செய்தபோது, சம்பிரதாயத் துக்கு இரண்டு வார்த்தை பேசிவிட்டு, போனை மெகரிடம் கொடுத்துவிட்டார் மாமியார். ''என்ன ஏதாவது பிரச்னையா?'' என்று கவலையுடன் அம்மா கேட்ட மறு வினாடி, தன் மனத்தாங்கல், கோபம் அனைத்தையும் கொட்டித் தீர்க்க, அது மாமியார் காதுகளிலும் விழுந்தது.

அன்று இரவு மகன் வீடு திரும்பியதும், தன் மனக்குறைகளை கொட்டித் தீர்த்து விட்டார் இம்ரானின் அம்மா. படுக்கைக் குப் போன நேரத்தில் இப்பிரச்னை மீண் டும் பூகம்பமாய் வெடித்தது. கோபத்தில் முளைத்த வார்த்தைகள் கட்டிலில் ஆளுக்கு ஒரு பக்கமாய் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ளாதபடி திருப்பிப் போட் டது.

'வாயைத் திறந் தால்தானே பிரச்னை; பேசாமல் இருந்துவிடலாம்' என்ற எண்ணம் அனைவருக்கும் வர, மரு மகளுடன் பேசுவதையே குறைத்துக் கொண் டார்கள். எல்லோரும் தன்னை ஒதுக்குவதாக நினைத்த மெகர், அடிக்கடி அம்மா வீட்டுக்கு ஃபோன் செய்து தன் மனக்குறை களைப் பகிர்ந்துகொண்டாள். இது மாமி யார் - மருமகள் இடையிலான இடை வெளியை அதிகரித்தது.

**"வீட்டுக்கு வர்றவங்ககிட்டே என்னைப் பத்திக் குறைசொல்றதும், அவங்க அட்வைஸ் பண்றதும் எனக்குத் துளியும் பிடிக்கலை"**

இந்தத் திருமணத்தில், இம்ரான், மெகர் இருவரது பெற்றோர்களும், தங்களு டைய மகன்/மகள் விஷயத்தில் தாங்கள் தவறு செய்துவிட்டதாக குற்ற உணர்வு கொண்டிருந்தார்கள். இம்ரான், மெகர் இருவருக்குமே, தங்கள் பெற்றோர் தங் களுக்கு ஏற்ற துணையைத் தேடித் தர வில்லை என்ற ஏமாற்றம்!

ஒருகட்டத்தில் இம்ரான்-மெகர் இரு வரது குடும்பங்களிலும், இந்தப் பிரச் னைக்கு எப்படியாவது தீர்வு கண்டே ஆக வேண்டும் என்று நினைத்தார்கள். இரு வீட்டாரும், பொதுவான மனிதர் முன்னிலையில் உட்கார்ந்து பேச, காரசார மான வாக்குவாதம் நடந்தது. ஆனாலும், இந்தத் திருமணம் வேண்டாம்; முறித்துக் கொள்ளலாம் என்று ஒருபோதும் நினைக்க வில்லை.

இம்ரான் தரப்பில் என்னை அணுகி ஆலோசனை கேட்டபோது, ''ஒரு இரண்டு வருடகாலம், இம்ரான்-மெகர் இருவரையும் தனிக் குடித்தனம் வையுங்கள்; 'இனிமேல் உங்கள் வாழ்க்கை; நல்லது, கெட்டதைத் தீர்மானித்து, நீங்களே முடிவுகள் எடுங் கள்' என்று பொறுப்பை அவர்களிடமே விடுங்கள். நீங்கள் அவர்களின் தினசரி



வாழ்க்கையில் மூக்கை நுழைக்கக் கூடாது'' என்று ஆலோசனை கூறினேன்.

நான் இப்படிச் சொன்னதற்குக் காரணம் உண்டு. துபாயில் தனிக்குடித்தனம் நடத்திய அவர்களது மூத்த மகள் - மருமகன் ஃபாத்திமா-முஸ்தஃபா வீட்டுக்கு, அப்துல்லா தன் மனைவியுடன் இரண்டு வார காலம் சென்றிருந்த சமயம், அங்கேயும் மாமியார்-மருமகள் பிரச்னை வராமல் இல்லை. ஆனால், ஃபாத்திமா அந்தப் பிரச்னை எதுவும் தனக்கும், முஸ்தஃபாவுக்கும் இடையிலான உறவைப் பாதிக்க அனுமதிக்கவில்லை. இதுகுறித்து தன் பெற்றோர்களிடமும் வாய் திறக்கவில்லை; ''இதெல்லாம் நம்முடைய பிரச்னை; அவை நம் பெற்றோர்கள் காதுவரை போக வேண்டிய அவசியமில்லை'' என்பது ஃபாத்திமாவின் திடமான கருத்து.



காதல் திருமணங்கள், பெற்றோர்களது சம்மதத்தின் பேரில் நடந்தாலும், பெற்றோர்களின் விருப்பத்துக்கு மாறாக நடந்தாலும், திருமணம் செய்து கொள்ளும் இருவரும், 'இது நாம் முடிவு செய்த திருமணம். நமது முடிவு தோல்வியாகக் கூடாது. நமது வாழ்க்கையை மகிழ்ச்சிகரமானதாக, வெற்றிகரமானதாக்குவது நம் பொறுப்பு' என்று நினைக்கிறார்கள்.

பெற்றோர்கள் பார்த்து நடத்திவைக்கும் திருமணத் தம்பதிகள், மணவாழ்க்கையை வெற்றிகரமாக்குவது பெற்றோர்களுடைய பொறுப்பு என நினைக்கிறார்கள்! திருமண வாழ்க்கையில் ஏதாவது சிக்கல் என்றால், அதற்குத் தாங்கள் காரணம் என்று நினைக்காமல், தங்களுடைய பெற்றோர்கள் தான் முழுக்க முழுக்கக் காரணம் என நினைத்து விடுகிறார்கள்! அல்லது, 'பிரச்னைக்கு நாங்கள் மட்டுமா காரணம்? நீங்களும் தானே?' என்று குத்திக்காட்டுகிறார்கள்.

திருமணத்தை வெற்றி பெறச் செய்யும் பொறுப்பு கணவன் - மனைவியுடையது தான். பிரச்னை ஏற்படுகிறபோது, அம்மா, அப்பா, மாமியார், மாமனார் இவர்களையோ, திருமணத் தரகர் உள்ளிட்ட வேறு யாரையுமோ குற்றம் சொல்லிப் பயனில்லை; அதனால் பிரச்னைகள் தீரப் போவதுமில்லை. அதற்குச் சில சிம்பிள் விதிகளை நினைவு வைச்சுக்கிட்டா போதும்.

திருமண உறவு என்பது முதலில் கணவன் - மனைவிக்கு இடையிலான கமிட்மென்ட். அதை வேறு யாரும் வந்து நிறைவு செய்ய முடியாது.

அப்படியானால் பிரச்னைகள் வருகிறபோது என்ன செய்ய? எப்படித் தீர்ப்பது...?

**(அழைப்பு தொடரும்)**

எழுத்தாக்கம் : **எஸ். சந்திரமௌலி**

**(குறிப்பு:**
**இத்தொடரில் இடம்பெறும் மாடல் படங்களுக்கும் சம்பவங்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை).**

# கல்பாக்கம்: அணு உலையா?

கட்டுரை: ஜி.எஸ்.எஸ்.
படங்கள்: ஸ்ரீஹரி

கல்பாக்கம் பகுதியின் மீது எந்த விமானமோ ஹெலிகாப்டரோ பறக்கக் கூடாது. மீறிப் பறந்தால் ராணுவம் உடனடியாக 'உரிய நடவடிக்கை' எடுக்கும்; ஏற்கெனவே நடைமுறையில் இருந்தாலும் தீவிரவாதிகளின் மும்பை தாக்குதலைத் தொடர்ந்து மீண்டும் அதிகக் கட்டுப்பாட்டுடன் முடுக்கிவிடப்பட்ட நடவடிக்கைகளுள் ஒன்று இது.

தீவிரவாதச் செயல்கள் என்றால் காஷ்மீர் மற்றும் வடகிழக்குப் பகுதிகளில்தான் என்றிருந்த நிலை மாறி, வழிபாட்டுத்தலங்களும் பொதுமக்கள் அதிகமாகக் கூடும் சந்தைகளும் ரசாயனத் தொழிற்சாலைகள், பவர் ஸ்டேஷன்கள், அணுசக்திக் கூடங்கள் ஆகியவையும் இனி தீவிரவாதிகளின் முக்கிய இலக்குகளாக அமையக்கூடும் என்கிறார்கள்.

அணுசக்திக் கூடங்களின்மீது தாக்குதல் எனும்போது கதிரியக்கக் கசிவு ஏற்பட்டால் விளைவுகள் விபரீதமாக இருக்கக்கூடும். பாதிக்கப்பட்ட மக்களின் சந்ததிகளுக்குக் கூட குறைபாடுகள் விளையும்!

தீவிரவாதிகள் தாக்குவார்களோ என்ற அச்சம் ஒரு புறம் இருக்க, அணு உலை நிலையத்திலிருந்து மெல்ல மெல்ல வெளியாகும் கதிர்வீச்சுகள், அங்கு பணிபுரியும் பணியாளர்களுக்கு உடனடியாகவும், சுற்றுப்பகுதி மக்களுக்கு மெல்ல மெல்லவும் பாதிப்பை ஏற்படுத்துகின்றன என்று வெளியாகும் செய்திகள் கவலையைத் தருவதாக உள்ளன.

போதாக்குறைக்கு இன்னோர் உபரித் தகவல்: காரைக்கால் அருகே உள்ள கடற்கரைப் பகுதியில் அணுக்கதிர்கள் அதிகம் காணப்படுகின்றன. அங்குள்ள மீனவப் பெண்களுக்கிடையே தானாக நிகழும் கருச்சிதைவின் அளவு அதிகரித்திருக்கிறது. காரணம் கல்பாக்கத்தின் சில அணுக் கழிவுகள் கடலில் கலக்கப்படுவதுதான் என்று ஒரு ஆய்வின் முடிவு சொல்கிறது. கல்பாக்கத்திலிருப்பது அணு உலையா? அனைவருக்கும்

# அனைவருக்கும் உலையா?

## - கல்கி யின் கள ரிப்போர்ட்

**உலையா? என அறிந்து கொள்ள நேரே சென்று ஆய்வு செய்தோம்.**

**க**ல்பாக்கம் சுற்றுப்பகுதியில் வசிக்கும் சந்தோஷ்குமார், ஒப்பந்த அடிப்படையில் அணுக் கழிவுகளைச் சுத்தம் செய்வதற்காக வேலைக்கு அமர்த்தப்பட்டவர். இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பன். அவரைப் பாதித்திருப்பது ஆசனவாய்ப் புற்று நோய்.

''மலம் வெளியேற ட்யூப் போட்டிருக்காங்க. வைத்தியச் செலவு ரொம்ப ஆகுதுங்க. இதுக்காக எங்க வீட்டை வித்துட்டு, இப்ப இந்தக் குடிசையில குடியிருக்கோம்'' என்று அவரது தாய் சாந்தி கூறுவதைக் கேட்கப் பரிதாபமாக இருக்கிறது.

ஹபீப் ராணி முப்பது வருடங்களாக இப்பகுதியில் இருப்பவர். தைராய்டு புற்றுநோயின் முற்றிய நிலையில் காணப்பட்டார்.

**க**ல்பாக்கத்துக்கு மிக அருகே உள்ள சதுரங்கப்பட்டினம் மீத்தூர் பகுதியைச் சேர்ந்த மீனவர் குடும்பங்களையும் வியாதிகள் விடுவதாக இல்லை. மகேஸ்வரிக்குக் கடந்த இருபது வருடங்களாகவே தைராய்டு பிரச்னை. தன் மகளுக்கும் இதே பிரச்னை வருமா? இது பரம்பரை நோயா? அல்லது தாங்கள் இருக்கும் பகுதியின் சுற்றுச் சூழலால் உண்டாவதா? இந்தக் கேள்விகளை எழுப்பினார் அவர். கோவிந்தம்மா என்ற மற்றொரு மீனவ சமுதாயப் பெண்ணுக்கும் தைராய்டு பிரச்னை இருக்கிறது.

சுந்தரம்மாளின் மருத்துவக் குறிப்பில் 'ஃபாலிகுலர் கார்ஸினோமா' என்றிருக்கிறது. அதாவது, தைராய்டு





புற்றுநோய்.

இவையெல்லாம் தற்செயலாக இருக்கக் கூடாதா? தமிழகத்தின் எந்தப் பகுதியை எடுத்துக் கொண்டாலும், அங்கே புற்றுநோயால் பாதிக்கப்பட்டவர்கள் இருக்கிறார்களே? இந்தக் கேள்விகள் நியாயமானவைதான்.

● சுந்தராம்மாள்



என்றாலும் தைராய்டு புற்றுநோயைப் பொறுத்தவரை, அணுக்கதிர் வீச்சுகள் அதற்குக் காரணமாக இருக்க வாய்ப்புகள் அதிகம். அணு உலை (ரியாக்டர்) என்பது திடம், திரவம், வாயு ஆகிய மூன்று விதக் கழிவுகளை வெளிப்படுத்தும். இவற்றில் அயோடின் 131 வாயு ஆபத்தை ஏற்படுத்தக்கூடியது. (அயோடின் 131 உரிய விதத்தில் மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகிறது என்பதும், உரிய விதத்தில் செலுத்தப்படும்போது அது கதிர்வீச்சுக்கெதிரான சிகிச்சைக்கும் பயன்படுகிறது என்பதும் ஒரு சுவாரஸ்யமான முரண்.)

கதிர்வீச்சிலிருந்து வெளியாகும் அயோடின் 131, பெண்களைத்தான் அதிகம் பாதிக்கிறது. காரணம் அவர்கள் உடலில் சுரக்கும் ஹார்மோன்கள். இந்த அயோடின் 131 சத்து, தைராய்ட் சுரப்பி உள்ள நமது தொண்டைப் பகுதியைத் தனது தங்கும் இடமாகத் தேர்ந்தெடுக்கிறது.

கல்பாக்கம் பகுதியில், ஏழைகளின் டாக்டராகக் கருதப்படும் டாக்டர் புகழேந்தி, அணுசக்தி நிலையத்தின் செயல்பாடுகள் குறித்து அடுக்கடுக்காகக் குற்றம் சாட்டுகிறார்:

''கல்பாக்கம் பகுதி மக்களின் கோலோன் புற்றுநோய்க்கு அணு நிலையம் முக்கியக் காரணம் வகிக்கிறது. (கோலோன் என்பது நம் குடலின் மிகக் கீழ்ப் பகுதி. கழிவிலுள்ள தண்ணீர் மற்றும் உப்பை உறிஞ்சிக் கொண்டு பிறவற்றை உடலிலிருந்து வெளியேற்றுகிறது). பொதுவாக இந்தப் புற்றுநோய் நாற்பது வயதுக்கு முன் வர வாய்ப்பில்லை. ஆனால் சந்தோஷுக்கு இந்தப் பாதிப்பு நேர்ந்திருக்கிறது.

உடலில் உண்டாகக் கூடிய மற்றொரு விபரீதம் மல்டிபிள் மைலோமா. கதிரியக்கத்தால் உண்டாகக் கூடிய பாதிப்பு இது. எலும்பு



● ஹபீப்ராணி

மஜ்ஜையில் ஏற்படக் கூடிய புற்றுநோய். இத னால் நோய் எதிர்ப்பு சக்தி வெகுவாகக் குறைந்து வாழ்நாள் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்து விடும்.

கல்பாக்கத்தில் மல்டிபிள் மைலோமா தொடர்பான ஆராய்ச்சியில் இறங்கினோம். ஒன்றரை வருடங்களுக்கு நடைபெற்ற இந்த ஆராய்ச்சியில், கல்பாக்கம் அணு உலைகளில் பணி யாற்றிய இரண்டு பேரும் கல்பாக்கம் நகரியத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணியும் இந்தப் புற்றுநோயால் பாதிக்கப்பட்டு இறந்ததை அறிந்தோம்.

சென்னை அடையாறு புற்று நோய்க் கழகம் 'ஆண்களில் ஒரு லட்சத்துக்கு 1.7 பேரும், பெண்களில் ஒரு லட்சத் துக்கு 0.7 பேரும் இந்த நோயால் இறக்கிறார்கள் என்று புள்ளி விவரம் தருகிறது. அதாவது, ஒரு லட்சத்துக்கு 2.4 நபர்கள்.

எங்கள் ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்ட 'ஒன்றரை வருடத்துக்கு 3 நபர்கள் இறப்பு' என்ற கணக்கை வைத்துப் பார்த்தால், வருடத் துக்கு 2 நபர்கள் என்றாகிறது. ஆனால், கல்பாக் கத்தின் மக்கள் தொகை அதிகபட்சம் 25,000தான். அதாவது இந்திய விகிதத்தைப் போல நான்கு மடங்கு பாதிப்பு அங்கு ஏற்பட்டிருக்கிறது.

மேலும் தெளிவான ஆய்வுகளை முழுவதுமாக என்னால் செய்ய முடியாமல் தடைகள் உண்டா கின்றன'' என்கிறார்.

புற்றுநோயால் பாதிக்கப் பட்ட ஒருவரைச் சந்தித் தோம். முதலில் தன்மை யாகப் பேசிய அவர், திடீ ரென தன்போக்கை மாற்றிக் கொண்டார். இதற்குப் பின் னணி அவருக்கு அணுசக்தி நிலையம் அளித்த ஒப்பந்த வேலைகள் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

அணு உலைநிலையம் தம் செயல்பாடுகளை மாற்றியமைக்க வேண்டிய அவசியம் ஒருபுறமிருக்க, பாதிக்கப்பட்டவர் களுக்கு நஷ்ட ஈடு கூடக் கிடைப் பதில்லை என்பது பெரிய வேதனை. ''நஷ்டஈடு வழங்கினால், அணுமின் நிலையத்தால் அபாயம் இருப்பதை ஒப்புக் கொண்டதாகிவிடும் என்ற அச்சமோ என்னவோ?''

> **கல்பாக்கம் பகுதி மக்களைப் பாதிக்கும் கோலோன் புற்றுநோய்க்கு அணுமின் நிலையம் முக்கிய காரணம்!**





• மகளுடன் அம்மா சாந்தி...

எனச் சுட்டிக் காட்டுகிறார் டாக்டர் புகழேந்தி.

இப்படி பாதுகாப்பு, ஆரோக்கியம் ஆகிய இரு கோணங்களிலும் கவலைப்படும்படியான கேள்விகள் எழுப்பப்பட, அவற்றைச் சுமந்துகொண்டு கல்பாக்கம் அணு உலை நிர்வாகத்தினரைச் சந்திக்க முடிவு செய்தோம். அங்கு நம்மை எதிர்கொண்டது ஒருவர் அல்ல, ஒரு படை!

(நிர்வாகத்தின் பதில்கள் அடுத்த வாரம்)

இன்றைய தேதியில் அணுவினால் உற்பத்தியாகும் மின்சாரம் குறைவுதான். மூன்று சதவிகிதம்கூட இல்லை. வெப்பத்தின் மூலம் (Thermal) 82 சதவிகித மின்சாரமும், நீரின் மூலம் (Hydro Electric) பதினான்கு சதவிகித மின்சாரமும் பெறப்படுகிறது. சூரிய சக்தி, காற்று சக்தி ஆகிய வற்றால் வெறும் 2.84 சதவிகிதம்தான்.

இப்போதுள்ள கரியின் அளவு, இந்த நூற்றாண்டு வரைதான் தாக்குப் பிடிக்கும். போதாக்குறைக்கு உலக வெப்பமயமாதலுக்கு இது முக்கியக் காரணமாக அமைகிறது என்கின்றனர் விஞ்ஞானிகள். தவிர, மேலும் ஆழமாகத் தோண்டத் தோண்ட கரிக்கான செலவு அதிகமாகும். தரக் குறைவான கரியே கிடைக்கும்

அங்கங்கே தண்ணீர் தேவைப்படும்போது நீர் மின்சக்தி கிடைக்கத் தடை ஏற்படுகிறது. அணைகள் எழுப்புவதில் பிரச்னைகள். (ஹொகேனக்கல் ஒரு உதாரணம்)

இந்த நிலையில் அணுவின் மூலம் மின்சாரம் தயாரிப்பது என்பது இயல்பான சிந்தனைதான்.

கரியிலிருந்து மின்சாரம் எடுக்கும்போது அந்தத் தனிமத்திலுள்ள எலெக்ட்ரான்கள்தான் பங்கு பெறுகின்றன. ஆனால், அணுமாற்றத்தில் அதன் மையப்பகுதியான நியூக்ளியஸ் பங்கெடுத்துக்கொள்கிறது. அப்போது பிரமாண்டமான சக்தி வெளியாகிறது. இதன் மூலம் மின்சாரத்தை உற்பத்தி செய்ய முடிகிறது.

அணுவின் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்ய யுரேனியம் 235 என்ற தனிமம் தேவை. ஆனால், இது வெறும் 0.7 சதவிகிதமே நம் நாட்டில் இருக்கிறது.

மற்றபடி நம்மிடம் உள்ள யுரேனியம் 238 என்ற தனிமத்தை இப்படி மாற்றி, புளூட்டோனியமாகவும் உருமாற்றும்போது கிடைக்கும் மின்சக்தி மிக அதிகம்.

அதேசமயம் தோரியம் மிக அதிக அளவில் நம் நாட்டில் கிடைக்கிறது. அடுத்த இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பயன்படுத்தி மின் உற்பத்தி செய்யும் அளவுக்குத் தோரியம் இருக்கிறது. இதை அணு உலைகளின் மூலம் மின்சக்தி ஆக்கும் ஆராய்ச்சிப் பணியைத்தான் ஹோமி பாபா தொடங்கி வைத்தார்.



• ஹோமி பாபா

# பக்கத்து வீட்டு வில்லன்?



★ இசைப்புயலின் ஆர்ப்பாட்டமில்லா அமைதியான பேட்டி ஆச்சர்யப்பட வைத்தது - **என்.கோமதி, நெல்லை-7** ★ கல்கியின் காலேஜ் ரவுக 'ஜாலி எலெக்ஷன்' செய்திகள் படு அமர்க்களமாக சுவாரஸ்யப்படுத்தின! வெகு ஜோர்! - **ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்** ★ 'தியேட்டரில் நமது பக்கத்து சீட்டில் உட்கார்ந்து படம் பார்த்துக் கொண்டிருப்பவரும் வில்லனாக இருப்பாரோ' என்று படிக்காதவன் பட விமர்சனத்தில் குறிப்பிட்டிருந்தது, கல்கிக்கே உரித்தான குசும்பு! - **போடி எஸ்.சையது முகமது, சென்னை** ★ அக்கம் பக்கம் காரசாரம் - **கோமனா ரங்கநாதன், சென்னை** ★ நான்கைந்து எம்.பி., எம்.எல்.ஏ. சீட்களுக்காக தமிழக பா.ஜ.க. கள் விற்பனையை ஆதரித்துப் போராடுவது உலக மகா கேவலம்!- **எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்** ★ 25.1.09 கல்கியில் புத்தகச் சந்தையா? கண்காட்சியா? என்ற தலைப்பில் கவிஞர் திலகபாமா குறிப்பிட்ட கருத்துக்கள் ஏற்புக்குரியன அல்ல. புத்தக விற்பனைக்காக என்னென்ன மோசமான வழிகள் கையாளப்படுகின்றன என இவரால் தெளிவாகக் கூறப்பட்டிருந்தால், இவரது கருத்து மறுபரிசீலனைக்குரியதாக அமைந்திருக்கும் - **பொ.கந்தசாமி, திருத்தங்கல்** ★ கல்கி வட்டமேஜை (1.2.2009) திருவாரூர் ஸ்பெஷலா? - **ஜே.துரைராஜ், சென்னை - 116** ★ நியாயத்தை ஆணித்தரமாகச் சொல்வதில் நீங்கள் மிகச்சிறந்த வல்லுநர் என்பதை, தங்கள் தலையங்கத்தின் மூலம் நிரூபித்து விட்டீர்கள். சத்யத்தை மீட்க அரசு செய்யும் நிதி உதவி பல மோசடிகளை ஊக்குவிக்கும் என்பது நிச்சயம் - **என்.ஆர்.ராஜேந்திரன், கொட்டிவாக்கம்**

---

**கல்கி** 11.1.09 இதழில் 'அம்மா பற்றிய சிறு குறிப்பு' என்ற தலைப்பில் வெளியான சின்னஞ்சிறு கதை, வேறு இதழில் ஏற்கெனவே வெளியானது என்று பல கடிதங்கள் வந்துள்ளன. குறுங்கவிதை வடிவிலான அக்கதையை, கிரிஜா ஸ்ரீராம், தாம் ஈமெயிலில் பெற்று, ரசித்த கவிதை என்று குறிப்பிட்டே துணுக்குப் பகுதிக்கு அனுப்பியிருந்தார். குறுங்கதையாக அது வெளியிடப்பட்டது எமது தவறே.

**கல்கி** 25.1.09 இதழில் 62ம் பக்கம் சி.பி.செந்தில்குமார் எழுதியதாக வெளியான ஜோக்கை எழுதியவர் எஸ்.ராமன். வாசகர்கள் பெயரைத் திருத்தி வாசிக்கவும்.

- ஆசிரியர்

## நீங்கள் கேட்டவை

● பா.அசோக், திருவில்லிபுத்தூர்

? இந்தியாவில் முதல் முறையாக கோவை அண்ணா பல்கலை, தேர்வுகளை அவுட்ஸோர்ஸிங் முறையில் நடத்தவுள்ளதாமே?

! கல்வி வியாபாரமாகி வருவதற்கு அனுசரணையாக இன்னொரு நடவடிக்கை. வியாபார நோக்கு அதிகரிக்க அதிகரிக்க, கல்வியின் தரம் குறையும்; ஊழல் பெருகும்.

● அ.பேச்சியப்பன், ராஜபாளையம்

? ஐ.டி.கம்பெனிகளுக்கு அடிமேல் அடி விழுவது ஏன்?

! படி மேல் படியாக உயராமல், செயற்கையான வேகத்தில் வளரும் எதுவுமே இப்படி அடிமேல் அடி வாங்கித்தான் ஆக வேண்டும். இது இயற்கை நியதி.

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? பாகிஸ்தானில் பெண்கள் பள்ளிக்கூடங்களுக்குச் சென்று படிக்கக் கூடாது என்று தலிபான்கள் நானூறு தனியார் பெண்கள் பள்ளிக்கூடங்களை மூட வைத்ததோடு, நான்கு அரசுப் பள்ளிக்கூடங்களை குண்டு வைத்துத் தகர்த்திருக்கிறார்களே?

! ஆஃப்கானிஸ்தானில் நிகழ்ந்திய கொடுமையை பாக். எல்லைப் பகுதிகளில் விரிவாக்கம் செய்திருக்கிறார்கள். பாக். அரசு கைகளைப் பிசைந்து கொண்டிருக்கிறது. பரிதாபம்.

● எஸ்.முரளி, ஸ்ரீரங்கம்

? 'புஷ் ரொம்ப நல்லவர்' என்று ஒபாமா கொடுத்த சர்டிஃபிகேட் ஒரிஜினலா? டூப்ளிகேட்டா?

! நல்லவர் என்றுதானே சொன்னார்? கெட்டிக்காரர் என்றோ, சரியான திட்டங்களை வகுத்து அமல்படுத்தினார் என்றோ கூறவில்லையே! எனவே, ஒபாமா வழங்கியது சாமர்த்தியமான சர்டிஃபிகேட். நல்ல மனத்துடன் தவறுகள் இழைக்கவும் கூடுமல்லவா?

● இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி

? சேரன் தனது திரைப்படங்களில் கருத்து சொல்வது யாருக்கும் பிடிக்கவில்லை என்கிறாரே - இது குறித்து?



# ஐ.டி.க்களுக்கு அடி மேல் அடி ஏன்?

! கருத்தை கருத்தாக இல்லாமல், நல்ல கதை ரூபத்தில், நயமாகச் சொன்னால் பிடிக்காமல் போகாது. சேரன் கருத்துள்ள சினிமா தருவதை நிறுத்தக்கூடாது என்பதே என் கருத்து.

● பவானி கிருஷ்ணா,
பெங்களூரு ★

**? கேரள மார்க்ஸிஸ்ட் எம்.பி. அப்துல்லா குட்டி, குஜராத் முதல்வர் மோடியின் நிர்வாகத்தைப் பாராட்டிப் பேசி, அதைக் கேரளாவிலும் முன்னுதாரணமாகக் கொள்ள வேண்டும் என்று சொன்னதற்காக சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளாரே?**

! நமது பரம எதிரிகளிடம்கூட சில நல்ல அம்சங்கள் இருக்கும். அதை ஏற்கவும் பாராட்டவும் பரந்த மனம் வேண்டும். அது கம்யூனிஸ்டுகளிடம் இல்லை. அவர்கள் பிடித்த முயலுக்கு மூன்று கால் என்றால், மூன்றே கால்கள்தான்! குட்டுப்பட்டாலும், அப்துல்லா தட்டி - கொட்டி விட்டுக்கொண்டு தலை நிமிர்ந்து நிற்கட்டும்.

● சி.விஜயகுமார்,
தேவனாங்குறிச்சி

**? மிகப் பெரிய மனிதர்களால் எளிமையாக வாழ முடியுமா?**

! எவ்வளவு உயரத்தில் இருந்தாலும் எளிமையாய் வாழ்பவனே பெரிய மனிதன்.

● ஜி.சுந்தரராஜன், சென்னை - 42

**? நடிகர்கள், விளையாட்டு வீரர்களுக்குக் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கத் தேவையில்லை என உ.பி. ஆளுநர் ராஜேஸ்வர ராவ் சொல்கிறாரே?**

! அஞ்சாமல் அரசியல்வாதிகளையும் சேர்த்துக் கூறியிருந்தால் ராஜேஸ்வரின் யோசனை ராஜகம்பீரத்துடன் இருந்திருக்கும். அள்ளித் தரப்படும் டாக்டர் பட்டங்கள் இன்று எள்ளிநகையாடும் அளவில் தான் உள்ளன.

● இரா.சக்கரபாணி, மதுரை ❐

**? அரசியல் சட்டப்படியும் நீதிபதிகள் நியமன விதிகளின்படியும், தாங்கள் சொத்துக் கணக்கைக் காட்டத் தேவையில்லை என்று நீதிபதிகள் வாதாடு**

★ தேவைக்குத் தேடும் தெய்வம்!



★ சாமர்த்திய சான்றிதழ்

★ வாழ்த்தும் வரை வாழ்வு!

**கிறார்கள். தேர்தல் வேட்பாளர்களுக்குச் சொத்துக் கணக்கைக் காட்ட வேண்டிய கட்டாயம் இருக்கிற போது, அரசிடம் ஊதியம் பெறும் நீதிபதிகள் மட்டும் அவ்வாறு செய்யாமல் இருப்பது என்ன நியாயம்?**

! ''சட்டப்படி அவசியமில்லை என்றாலும் நீதிபதிகளாகிய நாங்கள், தர்ம- நியாய அடிப்படையில் அதற்கு எங்களை நாங்களே உட்படுத்திக் கொள்கிறோம்'' என்று உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதி சொல்லியிருந்தால், மக்கள் மதிப்பில் வானளாவ உயர்ந்திருப்பார்.



● குட்டப்பட்ட குட்டி!



● சொத்து குறித்த கருத்து



● கருத்து குறித்த கணிப்பு

● **பி.என்.ஜெய்சங்கர், திருவாரூர்**

**? போராட்டங்களில் பொதுச் சொத்துக்குச் சேதம் விளைவித்தால், அரசியல் கட்சித் தலைவர்களே முழுப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்று உச்சநீதிமன்றம் நியமித்த கமிட்டி பரிந்துரைத்துள்ளதே?**

! இந்தப் பரிந்துரைக்கும் சிகரெட் பிடிப்பது உடலுக்குக் கேடு என்று சிகரெட் பெட்டிமேல் அச்சிடுவதற்கும் அதிக வித்தியாசமில்லை!

● **என்.சண்முகம், திருவண்ணாமலை**

**? தீவிரவாதத்தை ஒடுக்கினால்தான் பாகிஸ்தானுக்கு நிதி உதவி அளிக்கப் படும் என்ற ஒபாமாவின் அதிரடி அறிவிப்பு பற்றி?**

! ஆஃப்கானிஸ்தானிலும் ஈராக்கிலும் போரை முடிவுக்குக் கொணர்ந்து, அமெரிக்க துருப்புகளைப் படிப்படியாக வாபஸ் வாங்கும் திட்டமும் இருப்பதால், 'பாக்' உதவி அமெரிக்காவுக்கு எதிர்காலத்தில் தேவைப்படாது. எனவே, ஒபாமா 'பாக்' விஷயத்தில் எடுத்துள்ள இந்த முடிவில் உண்மையாகவும் உறுதியாகவும் இருக்க முடியும்; இருக்க வேண்டும்.

● **த.பரதன், திருவாரூர்**

**? இவ்வருட துக்ளக் ஆண்டு விழாவில் சோ பேசியதை ஜெயா பிளஸ் தொடர்ந்து காட்டிக் கொண்டிருந்ததைக் கவனித்தீர்களா?**

! ம்... வாழ்த்துகிற வரைக்கும் வாழ்வு! ஜெயா டீ.வி.என்ன; எந்த அரசியல் கட்சி சார்ந்த டீ.வி.யிலும் இதே பாலிசிதான்.

● **மு.ரா.பாலாஜி, கோலார்**

**? ''அழகிரின் பின்னால் தொண்டர்கள் வருவார்கள். யார் பின்னால் தொண்டர்கள் வந்துள்ளார்கள் என்பது மதுரை மக்களுக்குத் தெரியும்'' என கருணாநிதி சொல்லியிருப்பது...?**

! திருநீறு வைப்பதைக்கூட கிண்டல் செய்யும் நாத்திகர், தேவைப்படும்போது மட்டும் உதாரணம் காட்ட கடவுளைப் பயன்படுத்திக் கொள்வார். அப்படித்தான் இதுவும். நமது கவலை தொண்டர்களைப் பற்றியது அல்ல; தொண்டர் வேஷத்தில் வரும் குண்டர்களைப் பற்றித்தான். ●

| ❑ ரூ.100 பரிசு பெறுபவர் : | ★ ரூ. 50 பரிசு பெறுபவர் : |
|---|---|
| இரா.சக்கரபாணி, மதுரை | பவானி கிருஷ்ணா, பெங்களூரு |



# ஜெய் ஹோ ரஹ்மான்!

- ஸ்ரீ மதுமிதாமணி பெருமிதம்



* ஸ்ரீமதுமிதா மணி

'ஸ்லம்டாக் மில்லியனர்' திரைப்படத்தில் அசத்தலான இரண்டு ட்ராக்குகளைப் பாடியுள்ளார் சென்னையைச் சேர்ந்த பாடகி ஸ்ரீமதுமிதா மணி. அவரோடு பேசியபோது...

''திடீரென அக்டோபர் மாதம் (2008) ஏ.ஆர். ரஹ்மானிடமிருந்து ஒரு ஹாலிவுட் ப்ராஜெட்டுக்காகப் பாட வேண்டும் என அழைப்பு வந்தது. அது என்ன படம் என்ற எந்த விவரமும் அப்போது தெரியாது. பாடல் வரி என எதுவும் இல்லாமல், முழுக்க பரத நாட்டியத்துக்குப் பாடும் ஜதி ஸ்வரங்களைப் பாடச் சொல்லி ரஹ்மான் கேட்டுக்கொண்டார். அதன்படியே வெவ்வேறு விதமாக ஜதி ஸ்வரங்களைப் பாடினேன். திரைப்படத்தில் பார்த்த பிறகுதான் அதை எவ்வளவு அழகாகப் பயன்படுத்தியிருக்கிறார் என்பது புரிந்தது. மேலை நாட்டு மக்களுக்கும் நிச்சயம் இது ஒரு புதிய கோணத்தில்தான் அமைந்திருக்கும். இதுவரை ஜதி ஸ்வரங்களை அவர்கள் கேட்டிருக்கவே முடியாது. கதாநாயகன் தனது காதலியைத் தேடும் உணர்ச்சியைப் பிரதிபலிப்பதைப் போல, இந்த ஜதி ஸ்வரங்கள் ரொம்ப அழகாகப் புகுத்தப்பட்டிருக்கின்றன. நான் ஸ்லம்டாக் மில்லியனருக்காகப் பாடிய 'லிக்விட் டான்ஸ்' மற்றும் 'மிலியனர்' இரண்டுமே உலக அரங்கில் பெரும் பாராட்டைப் பெற்றிருப்பதை நினைத்து ரொம்பவே மகிழ்ச்சி. அல்கா யக்னிக், சுக்வீந்தர் ஸிங் போன்ற பிரபல பாடக பாடகிகள் பாடியுள்ள ஒரு திரைப்படத்தில் நானும் பாட வாய்ப்பு கொடுத்த ஏ.ஆர்.ரஹ்மானுக்கு, நான் என்றென்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்'' என்கிறார் ஸ்ரீமதுமிதா.

'ஜெய் ஹோ' ஏ.ஆர்.ரஹ்மான்.

- நளினி சம்பத்குமார்

# கண்ணகியின்

மதுரையை எரித்த கண்ணகி மேற்குத் தொடர்ச்சி மலைநோக்கி செல்கிறாள். பொள்ளாச்சி வழியாகப் பாலக்காடு பகுதியை அடைந்து குமிளிக்கு அருகில் உள்ள மலை உச்சியோடு அவள் பயணம் முடிகிறது.

சிலப்பதிகாரமும், செவி வழிச் செய்திகளும் குறிப்பிடும் தகவல்களின் அடிப்படையில், கண்ணகி நடந்து சென்ற பாதையை வரைபடத்தின் உதவியுடன் அனுமானித்து, கண்ணகியின் பாதச்சுவடுகளில் பயணித்து கண்ணகி பற்றிய கதைகளையும் தகவல்களையும் திரட்டியிருக்கிறார் அமெரிக்கரான எரிக்மில்லர்.

பென்சில்வேனியா பல்கலைக்கழகத்தில் நாட்டுப்புறவியல் ஆய்வு மாணவரான எரிக் மில்லரின் பி.ஹெச்.டி. ஆய்வேட்டின் தலைப்பு: 'கண்ணகியின் பாதச்சுவடுகளில்...' (In the footsteps of Kannagi)



''கண்ணகி மேற்குத் தொடர்ச்சி மலைகளை நோக்கித் தனியாகச் செல்லவில்லை! கூடவே பரதவர் எனப்படும் மீனவரும் வேறு சிலரும் அடங்கிய ஒரு மக்கள் கூட்டமே அவளைப் பின்தொடர்ந்து பாதுகாப்பாகச் சென்றிருக்கிறது. பொள்ளாச்சிக்கு மேற்கில் உள்ள மலைப் பகுதியில் வசிக்கும் 'முதுவன்' என்ற ஆதிவாசி இனத்தவர்கள், இன்றும் தங்களை கண்ணகியுடன் சென்றவர்களின் வழித்தோன்றல்களாக குறிப்பிடுகின்றனர்'' என்கிறார்.



**இந்தியா மட்டுமல்ல, உலக அரசியல் தலைவர்களும் படிக்க வேண்டிய பாடமாகக் கண்ணகி கதை இருக்கிறது!**

***ஆய்வுக்குச் சிலப்பதிகாரத்தைத் தேர்ந்தெடுத்தது ஏனாம்?***

''ஒரு தனி குடிமகள் - பண பலம் அற்றவள் - அந்நிய நாட்டு மண்ணோடு, மனிதர்களோடு அறிமுகம் அற்றவள் - அந்நாட்டை ஆளும் மன்னனின் முன்னால் நின்று பேச முடியும், பேசி வெல்ல முடியும் என்று காட்டியவள். அவளுடைய துணிச்சல் என்னைக் கவர்ந்தது! 'இன்றைய உலகின் மனசாட்சி' அவள்!

தவறிழைத்து விட்டதாகத் தெரிந்ததுமே உயிர்விட்ட பாண்டிய மன்னன் சிலப்பதிகாரத்தின் இரண்டாவது

# ..பாதச்சுவடுகள்!



ஹீரோ!'' என்று புகழ்கிறார் எரிக். ''இந்தியா மட்டுமல்ல, உலக அரசியல் தலைவர்களும், படிக்க வேண்டிய பாடமாகக் கண்ணகியின் கதை இருக்கிறது!'' என்கிறார்.

மைலாப்பூரில் உலக கதை சொல்லும் நிறுவனம் என்ற அமைப்பை உருவாக்கி அதன் இயக்குநராகவும் இருக்கிறார் எரிக்மில்லர்.

அண்மையில் அமெரிக்காவிலிருந்து வருகை புரிந்த 18 கதை சொல்லிகளை, காஞ்சிபுரம் மற்றும் செங்கல்பட்டு கிராமங்களுக்கு அழைத்துச் சென்று, அங்குள்ள வயசாளிகள் சொல்லும் கதைகளைக் (ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து) கேட்க வைத்திருக்கிறார்.

பண்ணாட்டுக் கருத்தரங்கு ஒன்றினை அமெரிக்காவில் நிகழ்த்தத் திட்டமிட்டிருக்கிறார் எரிக்மில்லர்.



✱ எரிக்மில்லர்

கண்ணகிக்குத் துணையாக நடந்தவர்கள் என்பதால், மீனவர்கள் மீது எரிக்மில்லருக்கு அப்படி ஒரு பற்றுதல்.

கட்டுமரப்பாட்டு, ஒப்பாரிப் பாட்டு, கும்மிப்பாட்டு, கதை சொல்லுதல் என்று மீனவ மக்களை வைத்து, கடல்சார் பண்பாட்டைப் பாதுகாக்கும் 'கடல் விழா' நடத்துகிறார்.

நொச்சிக்குப்பம் மீனவர் குடியிருப்புக்கு நம்மையும் அழைத்து, அங்கிருக்கும் சந்துகளில் அனாயாசமாகப் புகுந்து... ஏக களேபரமாக இருந்த ஒரு தெருமுனையில் நின்றுகொண்டு, 'ஆஹா! இந்த இடம் எவ்வளவு நல்லா இருக்கு!'' என்றார் இரு கைகளையும் விரித்து. உண்மைதான்! தினசரி வாழ்க்கையே அங்கே திருவிழா போல்தான் இருக்கிறது! எரிக்மில்லர் கடற்கரையோரம் நடந்தபடி சொன்னார்.

''இவர்களின் வாழ்க்கையை, சமூகத்தை, கலாசார வேர்களைக் காப்பாற்ற வேண்டும்! அதோ பாருங்கள். அவர்களின் குடிசைகளை விழுங்க, நகரம் கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து வருகிறது! இன்னும் கொஞ்ச நாளில் இவர்கள் காணாமல் போய்விடுவார்கள்! இவர்களைத் தாக்கியிருப்பது இரண்டு சுனாமிகள்! ஒன்று கடல் சுனாமி! மற்றொன்று மாநகர வளர்ச்சி என்ற பெயரில் வந்த சுனாமி!

இவர்களுக்காக இவர்களின் மத்தியிலேயே ஒரு பண்பாட்டு மையம் அமைக்க வேண்டும்! அங்கே மீனவ மியூசியமும், குழந்தைகளுக்கான கம்ப்யூட்டரும், ஆடல் பாடல் அரங்கும் இருக்கும். இதை அமைப்பது என் கனவு ப்ராஜக்ட்... அரசாங்கம் சிறிதளவு இடம் தந்தால் போதும்! இவர்களுக்கான மையத்தை உருவாக்கி விடுவேன்!''

- கை குலுக்கினார் எரிக்மில்லர்.

**- கோபாலி**

குறள் அரசுக் கழக முதல் மாநில மாநாடு, சமீபத்தில் திருச்சியில் நடைபெற்றது. மாநாட்டு அரங்கில் இறுதியாக 'திருவள்ளுவர்' நாடகம் நிகழ்த்தப்பட்டது.

● சென்னை, தமிழரசன் தியேட்டர்ஸ் நாடகக் குழுவினர் 'திருவள்ளுவர்' நாடகத்தினை மேடையேற்றி வருகின்றனர். 2006லிருந்து இந்நாடகம் நிகழ்த்தப்பட்டு வருகிறது. கடந்த மூன்றாண்டுகளில் பதினைந்து தடவை அரங்கேறியுள்ளது 'திருவள்ளுவர்'.

● நாடகக் குழுவில் இருபத்தேழு நபர்கள். இருபத்தாறு காட்சிகள்.

● சென்னை கடற்கரைத் திடலில், தனக்குத் தோன்றும்போதெல்லாம் உரை நிகழ்த்தும் வள்ளுவர்.

● கிணற்றில் தண்ணீர் இறைக்கும் சமயத்தில் வள்ளுவர் கூப்பிட, அதே வினாடியில், சகடையில் சட்டென வாளிக்கயிறு நிற்க, ஓடிவரும் வாசுகி.

● ''புலவர் சபையில் இதுவரை ஈரடி வெண்பாக்களை எவரும் பாடியதில்லையே'' என்கிற வள்ளுவரின் அச்சத்தைப் போக்கும் ஔவையார்.

● வள்ளுவர் எழுதி வைத்த ஓலைச் சுவடிகளை நெருப்புத் தீயில் எரித்து விடும் பழையன் எனும் முரடன்.

● இலங்கையிலிருந்து இன்னொரு படியை எடுத்து வரும் வள்ளுவரின் நண்பர் ஏலேல சிங்கர்.

● மதுரை தமிழ்ச் சங்கத்திலும் பொற்றாமரைக் குளத்திலும் திருக்குறளை அரங்கேற்றம் செய்யும் காட்சி.

● ''கற்பனை நிகழ்வுகளுடன் சமூக சிந்தனையைக் குழைத்து வள்ளுவப் பெருந்தகை பற்றிய நாடகத்தை உருவாக்கியிருக்கிறோம். திருவள்ளுவர் வாழ்க்கை பற்றி இரண்டு மணி நேர மேடை நாடகம் நடத்தி வருவது, தமிழகத்திலேயே எங்கள் நாடகக் குழு மட்டும்தான் என நினைக்கிறோம். நாடகம் அரங்கேறிய இடங்களில்

● பாலசுந்தரம்



# இலங்கையிலிருந்து வந்த திருக்குறள்!



உற்சாக வரவேற்பும், நல்ல மதிப்பும் கிடைத்தாலும் பெருமளவு வாய்ப்புகள் வந்து குவியவில்லை. கடை விரித்தோம்; கொள்வாரில்லை!'' என விரக்தியோடு சொல்கிறார் நாடகக் குழுத் தலைவர் பாலசுந்தரம்.

தொகுப்பு, சித்திரங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

மனம் ஒருமுகப்பட்டால்
செயல்கள் அனைத்தும்
சிறப்புடன் அமையும்

—மாதா அமிர்தானந்தமயி



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.